THIS WAY

REX

ORANGE SQUASH

CORN PRODUCTS Co. (INDIA) PRIVATE LTD. BOMBAY

# ரெக்ஸ் பற்றிய மிகவும் திருப்தியளிக்கும் இரண்டு அம்சங்கள்.

## ஒன்று, இதன் உன்னத தரம் — இப்போது, இதன் விலைநயம்.

ஒவ்வொருவர் சுவைக்கும் ஏற்ற
ஸ்க்வாஷ்கள் மற்றும் ஸிரப்களின் வகைகள்

ரெக்ஸ் ஸ்க்வாஷுகள் மற்றும் ஸிரப்கள்— அதாவது, இனிமையான, இன்சுவையுள்ள, சாறு செறிந்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்ட உன்னத பானங்கள் இவை. கவனமுடன் தேர்ந்தெடுத்த சேர்த்தியான பழங்களுடன் தூய கரும்பஞ் சாற்றுப் பாகும், விசேஷமான இதர சரக்குகளும் சேர்த்துத் தயாரிக்கப்படுகின்றன. சுவைத் தறியாத புத்துணர்ச்சி தரும் பானங்கள் இவை. இப்போது ரெக்ஸ் பானங்கள் சகாய விலையில் கிடைக்கின்றன. ரெக்ஸ் பானங்களைவிட அதிக திருப்தியளிக்கும் பானங்கள் வேறென்ன இருக்க முடியும்?

- ஆரஞ்சு ஸ்க்வாஷ்
- ஆரஞ்சு கிரஷ்
- லெமன் ஸ்க்வாஷ்
- லெமன் பார்லி
- லைம் ஜூஸ் கார்டியல்
- மாங்கோ ஸ்க்வாஷ்
- கோலா கான்ஸன்ட்ரேட் ஃப்ரூட் ஸிரப்
- ராஸ்பெர்ரி ஸிரப்
- ஸ்ட்ராபெர்ரி ஸிரப்
- பைனாப்பிள் ஸிரப்
- ரோஸ் ஸிரப்



கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரை. லிட். பம்பாய்—1



தன்னடக்க
முள்ள
தனிப்பெருமை
தவழவே
தாவண்கெரே
வாயில்கள்
தாவண்கெரே காட்டன் மில்ஸ்—பண்டைய மரபை இன்றைய வடிவாய்ப் படைக்குமிடம்!
lam.dcm 2 Tam

# டாப் ரகசியம்!




புதிய பினகா டாப் மட்டிலுமே, மறைந்துள்ள பாக்டீரியாக்களை அழிப்பதற்கென, பற்பசையை வாயின் எல்லாப் பகுதிகளிலும்—பல்லிடுக்குகளிலும், ஈறுகளிலும்—பரப்பும் ரகசியப் பொருள் அடங்கியுள்ளது. எனவே நீங்கள் நாள் முழுவதும் வாயில் 'டாப்' தூய்மையைப் பெறுவீர்கள்!

என்ன சான்று என்று கேட்கிறீர்களா? ஆராய்ச்சிக் கூடத்தில் நிரூபிக்கப்பட்ட இந்தச் சோதனையை நீங்களே செய்து பாருங்கள்!



முதலில், கண்ணாடித் தட்டு ஒன்றில் சிறிதளவு தண்ணீர் ஊற்றிக் கொள்ளுங்கள். இந்த நீரில் சிறிதளவு கரிப் பொடி அல்லது கலர்ப் பொடியைத் தூவுங்கள்.



சிறிதளவு கிரீம் பினகா டாப் கலந்து, கரைசலின் ஒரு துளியை கண்ணாடித் தட்டின் நடுவில் தெளியுங்கள்.



பினகா டாப் எப்படி எல்லாத் திசைகளிலும் அதி வேகமாகப் பரவி... அழுக்கை அகற்றி, தண்ணீரை நிர்மலமாக ஆக்குகிறது என்பதைக் கண்கூடாகக் காண்பீர்கள்.




**பினகா டாப்**... தூய்மையான வாய்ப் பாதுகாப்பின் 'டாப்' ரகசியம்!

mcm/ciba/150a/tam

# கல்கி

## பொருளடக்கம்



சாதாரண, வைகாசி, 10 – 1970, மே 24






| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |




இது பம்பரமல்ல—இஷ்டப்படி
சுற்றிக் கொண்டே
இருப்பதற்கு.





தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 29 ● இதழ் 43



# வன்செயல்களும் கலகங்களும்

தேசத்தின் பல பகுதிகள் கொந்தளிப்பான நிலைமையில் இருந்து வருகின்றன. வங்காளம், உத்தரப் பிரதேசம், ஆந்திரா போன்ற மாநிலங்களில் தீவிர கம்யூனிஸ்டுகளின் மூர்க்கமான தாக்குதல்கள் நீடித்து நடைபெற்று வருகின்றன. ஆந்திராவில் தெலுங்கானாக் கிளர்ச்சி இதே சமயத்தில் மீண்டும் தலைதூக்கியிருக்கிறது. வங்காளம் உட்பட சில மாநிலங்களில் கல்லூரிகளையும் நூல்நிலையங்களையும் தாக்கி அழிக்கின்ற நாச வேலைகள் வலுத்து வருகின்றன. அங்கு காலம் தாழ்ந்தேனும் நடவடிக்கை எடுக்க அரசு முன்வந்திருப்பது ஓரளவு மகிழ்ச்சிக்குரியது. உள்துறை அமைச்சர் சவான், நக்ஸல்பாரிகள் எனும் தீவிர கம்யூனிஸ்டுகளின் உண்மையான தன்மையை இப்பொழுதுதான் உணரத் தொடங்கியிருப்பதாகத் தெரிகிறது. 'அவர்கள் ஒரு தனிப்பட்ட ஸ்தாபனத்தினர் அல்லர். எல்லா வகைக் கம்யூனிஸ்டுகளும் உபயோகிக்கும் ஈட்டி முனையாகவே விளங்கி, வன்செயல்களில் அவர்கள் ஈடுபடுகிறார்கள்' என்ற உணர்வு ஒருகால் ஸ்ரீ சவானுக்கு ஏற்பட்டிருக்கக்கூடும். இப்பொழுது அவர்கள் வெளிப்படையாகவே பலாத்காரச் செயல்களில் ஈடுபடுவது அதிகரித்து விட்டது. அதன் கடுமை, உறக்கத்தில் ஆழ்ந்திருந்த ஸ்ரீ சவானையும் விழிப்புறச் செய்துவிட்டது. ஆனால் தேசமெங்கும் அலைபோலத் தாக்கி வருகின்ற வன்செயல்களை ஒரு மொத்தமாகச் சமாளிப்பதற்கு வேண்டிய மனப்பான்மை இன்னும் அவருக்கு ஏற்படவில்லை. நிகழ்ச்சிகள் உருவாகிக் கொண்டே போகையில் தவறுகள் தாமாகத் திருந்திவிடும் என்பது அவரது தவறான எண்ணம். ஆகையால் தான் 'வெகு ஜாக்கிரதையாகக் கவனித்து வருகிறோம்' என்றே சொல்லி வருவது அவருக்கு வழக்கமாகி விட்டது. அவர் தமது பணிகளை அவசர உணர்வுடன் கூடச் செய்யக் கடமைப்பட்டவர். நாட்டில் அமைதியை நிலைநிறுத்தப் பிரதம மந்திரி அவரையே முக்கியமாக நம்பியிருக்கிறார். ஆனால் அந்த நம்பிக்கை இதுவரை போதிய பலன் தரவில்லை.

ஸ்ரீ சவானது சொந்த மாநிலமான மகாராஷ்டிரத்திலேயே மிகப் பயங்கரமான வகையில் வகுப்புக் கலகங்கள் நிகழ்ந்துள்ளன. பிவாண்டி, ஜலகான் ஆகிய இரு நகரங்களிலும் சுமார் 120 பேர் வரை பலியாயினர். ஏராளமான வீடுகளும் கடைகளும் கொளுத்தப்பட்டன. இந்தக் கொலைகளும் நாச வேலைகளும் முன்னேற்பாடுகளுடன் நடந்திருப்பதாகவே தெரிகிறது. கலகம் தொடங்கிய பிறகு சர்க்கார் தமது மாமூலான போக்கில் நடவடிக்கை எடுத்தனர் என்பது உண்மையே. ஆனால் தமக்குரிய கடமைகளைப் போதிய முன்ஜாக்கிரதையுடன் அவர்கள் செய்து வந்திருந்தால் கலகம் இந்த அளவுக்குச் சீறி எழாதபடி தடுத்திருக்கக் கூடும்.

சென்ற வருஷம் காங்கிரஸ் இரண்டுபட்டு, ஆதிக்கப் போட்டியும் சூழ்ச்சிகளும் தேசமெங்கும் மேலோங்கிய சூழ்நிலையில் ஆட்சியாளர்கள் அமைதியைக் காப்பதில் போதிய கவனம் செலுத்தத் தவறிவிட்டனர். இதன் விளைவாகச் சமூக விரோத சக்திகளின் கை மேலோங்கியுள்ளது. விரைவில் நிலைமையைச் சரி செய்யாவிடில் தேசத்தின் எதிர்காலம் இருள் படர்ந்ததாகவே இருக்கும்.

மகாராஷ்டிரக் கலவரங்களைப் பற்றி விசாரணை நடத்த ஒரு ஹைகோர்ட் நீதிபதியை அம்மாநில அரசு நியமித்திருக்கிறது. அந்த விசாரணை விரைவில் பூர்த்தியாகிக் கலகத்தின் மூல காரணங்களை அகற்றுவதற்கான வழி முறைகளையும் சிபார்சு செய்யுமென்று நம்புகிறோம்.

மகாராஷ்டிரக் கலவரங்களைப் பற்றி மக்கள் சபையில் நடைபெற்ற விவாதத்தின்போது சிலர் பேசிய விதம் மிக மிக வருந்தத் தக்கது. பிரதம மந்திரி வகுப்புவாத சக்திகளைக் கண்டிக்கும் வகையில் சில சமயம் தமது அரசியல் எதிரிகளைத் தாக்கிப் பேசிய விதம் நிதானமற்றதாக இருந்தது. சமூக இணக்கத்துக்குப் பாடுபட வேண்டியது பிரதம மந்திரி உட்பட

எல்லாக் கட்சிகளின் தலைவர்களுக்குமுள்ள கூட்டுப் பொறுப்பு. எனவே கட்சி நோக்குடன் பாராமல், நிலையான தேசிய நலனைக் கருத்தில் கொண்டு எல்லோரும் உழைப்பது அவசியம்.

இவ்விஷயத்தில், ராஜாஜி சொல்வதைக் கவனிப்போம்: ''இந்தியாவில் உள்ள முஸ்லிம்கள் இந்தியர்கள் என்ற உணர்வு பெற வேண்டும் என ஜனசங்கம் விரும்புகிறது. உண்மையில் நாம் எல்லோருமே இன்று இந்திய உணர்வு பெற்றாக வேண்டியவர்கள். அதைச் செய்து முடிப்பதற்கு விரிவான வழி முறை தேவை. முஸ்லிம்கள் அல்லாதார் இந்திய உணர்வு பெறுவது எவ்வாறு? அவர்கள் குறுகிய பிராந்திய மனப்பான்மையை விட்டொழிக்க வேண்டும்; அகில இந்திய நலன்களைப் போஷிக்கும் விஷயத்தில் அவர்கள் மிகுந்த அலட்சிய புத்தி உள்ளவர்களாகக் காணப்படுகிறார்கள். இந்த நிலைமை மாற வேண்டும். ஜின்னா ஆதிக்கம் செலுத்திய காலத்தில் முஸ்லிம்களுக்குக் காங்கிரஸ் விடுத்து வந்தது போன்ற வேண்டுகோள்களை முஸ்லிம்களுக்கு விடுத்துவர வேண்டும். அவர்கள் தமது உணர்ச்சிகளைத் தேசிய மயமாக்கிக்கொள்ள வேண்டும் என்பதுதான் அந்த வேண்டுகோள். எவ்வளவு வெற்று உபதேசம் செய்தாலும் இன்றைய நிலைமையில் பயன்படாது. நற்செயல்களில் ஈடுபட்டு அவை நல்ல முறையில் பிறர் மனத்தில் எதிரொலிக்கும்படியாகச் செய்வதுதான் இன்றைய நிலைமையின் தேவை. முஸ்லிம்கள் இந்திய உணர்வு பெற வேண்டும் என்று கோருவதைப் போலவே பெரும்பான்மையாக உள்ள மற்றவர்களும் தமது தனிப் போக்குகளைக் கைவிட்டு இந்திய உணர்வு பெற வேண்டும் என்று கேட்பதுமுற்றிலும் பொருத்தமாயிருக்கும்.''

# ராஜாஜியின் கருத்துக்கள்

எவ்விதமான பாகுபாடும் இல்லாமல், தகுதியை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு, நல்லாட்சியை நேர்மையுடன் நடத்துவது தில்லியிலும் மாநிலங்களிலும் உள்ள சர்க்கார்களின் முதற் கடமை என்பது என் கருத்து. நல்லாட்சி என்பதில், சட்டத்தின் மாட்சிமையும் ஒழுங்கை நிலைநிறுத்துவதும் அடங்கும். பதவிகளையும் அதிகாரத்தையும் காப்பாற்றிக் கொள்வதற்காக யாரிடமும் பயப்படவோ தாட்சிண்யப்படவோ கூடாது.

பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டா ஆட்சியிலிருந்து தொழில் துறையை விடுவிப்பது அடுத்தபடி முக்கியமான விஷயமென நான் கருதுகிறேன். பெர்மிட்டுகளும் லைசென்ஸுகளும் தொழில்களுக்கு அவசியமென்று கருதப்பட்டால் அவற்றை வழங்குவதற்கான அதிகாரம் சுதந்திரம் உள்ளதும் நிபுணர்களைக் கொண்டதுமான ஒரு குழுவிடம் ஒப்படைக்கப்பட வேண்டும். தம்முடைய அன்றாட வாழ்க்கையில், தமக்குப் பிடித்தமான தொழில்களை நாடுவதில், தமது சேமிப்புகளை விடுமுதல் செய்வதில் பிரஜைகளுக்கு அதிகபட்ச சுதந்திரம் இருந்தாக வேண்டும்.

அதிகாரம் பரவலாக விநியோகமாக வேண்டும்; மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்ற கோட்பாட்டை நான் ஆதரிப்பவன். ஆனால் அத்தகைய அதிகார விநியோகத்துக்கு இது தருணமல்ல என்பது எனது திடமான கருத்து. அபாயம் மிகுதியாக உள்ள தருணத்தில் நாம் வாழ்கிறோம். உறுதியுடன், அச்சமின்றி, போதிய தகுதியுடன் நிரம்பச் செயலாற்றுகின்ற மத்திய ஆட்சிதான் இப்போது தேவை. கவர்னர்கள் மாநில மந்திரி சபைகளுக்கு நல்ல ஆலோசகர்களாக மட்டுமின்றி, மத்திய சர்க்காரின் பிரதிநிதிகள் போலவும் பணிபுரிய வேண்டும்.

மேற்கூறிய கருத்துக்களையுடைய கட்சிகள் ஒரு குறைந்தபட்ச வேலைத்திட்டத்தின் அடிப்படையில் ஒருங்கிணைய வேண்டும். அப்பொழுதுதான் காந்திஜி இந்திய விடுதலைப் போராட்ட காலத்தில் பெரும் புகழுடன் பணியாற்றியபோது எனக்கு இருந்து வந்த நம்பிக்கை உணர்வு மீண்டும் எனக்கு ஏற்படும். என் ஆயுட்காலத்திலேயே இத்தகைய மகத்தான கூட்டமைப்பு நல்லபடி ஏற்பட்டுப் பணியாற்றத் தொடங்க வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பமும் பிரார்த்தனையுமாகும். பொது வாழ்வில் உள்ள என் மதிப்புக்குரிய சகோதர சகோதரிகள் மனப்பூர்வமாக உழைத்தால் இந்த எண்ணம் நிறைவேறுவதற்கு ஆண்டவன் துணை புரிவான்.

*

ஸ்ரீ வி. வி. கிரி அவர்கள் ராஷ்டிரபதியாகத் தேர்வு பெற்றது செல்லத் தக்கதே என ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்புக் கூறிவிட்டது. இரு தரப்புக்களில் ஏதேனும் ஒன்றின் சாட்சியாகவோ அல்லது நீதி மன்றச் சாட்சியாகவோ பிரதம மந்திரியைச் சாட்சிக் கூண்டில் ஏற்றியிருந்தால் தீர்ப்பு வேறு விதமாக இருந்திருக்கக் கூடும். தேர்தலை ஆட்சேபித்தவர்களின் குற்றச்சாட்டுக்களில் ஒன்று யாதெனில் பிரதம மந்திரியும் அவரது மந்திரி சபைச் சகாக்களும் ஸ்ரீ கிரிக்கு வாக்குப் பெறுவதற்காக அளவுக்கு மீறித் தமது செல்வாக்கைப் பிரயோகித்தனர் என்பதாகும்.

*

தமிழ் நாட்டு அரசாங்கத்தின் நிலவரம்புத் திருத்தச் சட்டத்துக்கு ராஷ்டிரபதி தந்திருக்கும் அனுமதி, மாமூலான சம்பிரதாயப்படி அளிக்கப்படுவதேயாகும். எனவே இச்சட்டத்தை ஆட்சேபிப்பவர்கள் ராஷ்டிரபதி ஒப்புதல் அளித்து விட்டார் என்பது காரணமாகச் செயலிழந்து விடாமல் இருக்க வேண்டும். இவ்விஷயத்தை ஸுப்ரீம் கோர்ட்டும் பரிசோதித்தாக வேண்டும்.



திருவையாற்றில் மே 11ந் தேதி நடைபெற்ற ஸ்ரீ தியாகராஜ ஜயந்தி விழாவில் ஸ்ரீமதி எம். எஸ் ஸும், ஸ்ரீ. வி. வி. நரசிம்மனும் சேர்ந்து பாடுகின்றனர்.

# அரியதோர் இசை விழா

சென்னையில் உள்ள சத்குரு ஸங்கீத ஸமாஜத்தினர் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளிடம் கொண்டுள்ள தூய, ஆழ்ந்த பக்தி ஈடிணையற்றது. ஸமாஜத் தலைவர் டாக்டர் ஆர். கிருஷ்ணஸ்வாமி அவர்கள் ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளின் கிருதிகளில் மூழ்குளித்து, அவற்றில் உள்ள முத்துக்களைத் திரட்டி வருபவர். இதய சுத்தத்துடன் ஸங்கீத ஸத்குருவை வழிபட்டு வரும் சமாஜத்தினர், ஸ்ரீ தியாகையரின் 203வது ஜன்ம தினத்தை ஒட்டி இம்மாதம் 11-ந் தேதி திருவையாற்றில் அற்புதமான அகண்ட பஜனை நடத்தினர்.

இவ்விழா பல விதங்களில் முக்கியத்வம் வாய்ந்தது. இச்சந்தர்ப்பத்தில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளைக் குறித்து உள்ள தோத்திரங்களும் கீர்த்தனங்களும் 'ஸ்ரீ தியாகராஜ ஸ்துதி மாலை' என்ற பெயரில் ஒரு நூலாகத் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டது. நூலின் பதிப்பாசிரியர் உத்தர ரயில்வே பிரதம ஸுபரின்டென்ட் ஸ்ரீ டி. எஸ். பார்த்தசாரதி. நூலை வெளியிட்டவர் ஐ. நா. சபையின் பிரதம அதிகாரியான ஸ்ரீ வி. வி. நரசிம்மன். நூலின் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டவர் ஸங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி.

இனிய ராமனைப் பற்றி இனிக்கப் பாடிய இனிய தியாகையரைக் குறித்த இந்த நிகழ்ச்சி மிக மிக இனிதே நிறைவேறியது.

வி. வி. நரசிம்மன், டாக்டர் கிருஷ்ணஸ்வாமி, டி. எஸ். பார்த்தசாரதி போன்றவர்கள் வேறு துறைகளில் பிரமுகர்களாக இருப்பினும் அவர்களுக்குத் தியாகையரைக் குறித்தும், நமது சங்கீதம் குறித்தும் உள்ள ஆழ்ந்த ஈடுபாடும், தேர்ந்த ஞானமும் அவர்களை இசைப் பிரமுகர்களாகவே முதற்கண் நினைக்கச் செய்தது. பேராசிரியர் சாம்பமூர்த்தியும் விழாவில் சிறப்புரை ஆற்றினார்.

இவற்றுக்கு மேலாக இவ்விழாவில் குறிப்பிட வேண்டிய அம்சம்: அன்று ஸ்ரீ வி. வி. நரசிம்மனே சில தியாகைய கிருதிகளை சம்பிரதாய சுத்தமாகப் பாடினார். பின்பு ஸ்ரீமதி எம். எஸ். உள்ளமுருக சங்கீத வழிபாடு செய்தார். அதன் பிறகு ஸ்ரீ நரசிம்மனும் ஸ்ரீமதி எம். எஸ். ஸுமாகச் சேர்ந்து 'பண்டு ரீதி' என்ற தியாகராஜ கிருதியைப் பாடி ரசிகர்களை மகிழ்வித்தனர்; தியாகையரும், ஸ்ரீ ராமனும், சங்கீத மாதாவும் மகிழ்ந்திருப்பர்.

---

மே 10ந் தேதி கரூரில் நாரத கான சபையின் சங்கீத மண்டபத்தை ஸ்ரீ வி. வி. நரசிம்மன் திறந்து வைத்தார். இதையடுத்து ஸ்ரீமதி எம். எஸ் ஸின் இசைக் கச்சேரி நடந்தது.







# மிகவும் சிறந்த

மியூஸிஷியன்
மீடியம் வேவ் பான்ஸ்
25 மீட்டர்
பாண்டு ஸ்ப்ரெட்
ரூ. 125.00

மினி பாப்
2 பாண்ட்
ரூ. 175.00

# டிரான்ஸிஸ்டர்





# பிரபல

# மர்பி

மினி மாஸ்டர்
2 பாண்ட்
ரூ. 200.00

மூஸாபிர்
3 பாண்ட்
ரூ. 255.00

# டிரான்ஸிஸ்டர்

மர்பி டிரான்ஸிஸ்டருக்கு, பெரிய அளவு டார்ச் பாட்டரிகள் போதும்
விலைகள் எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டவை விற்பனை வரி தனி.

## உன்னத ஒலிநயம், சிறந்த அமைப்பு, சகாய விலை

மர்பி ரேடியோ இந்தியாவின் மிகப் பெரிய அதிநவீன டிரான்ஸிஸ்டர் பாக்டரியில் தயாரிக்கப்பட்டது. ரேடியோ தயாரிப்பில் 21 வருட ஆராய்ச்சி அனுபவம் மற்றும் தொழில்நுட்பத்திறனை பின்பலமாகக் கொண்டிருப்பதால், ஒவ்வொரு மர்பி டிரான்ஸிஸ்டரும் சிறந்த டிரான்ஸிஸ்டராக விளங்குகிறது. இதுவரை 1,00,000க்கும் அதிகமான மர்பி டிரான்ஸிஸ்டர்களும், ரேடியோக்களும் வெளி நாடுகளில் மட்டுமே விற்கப்பட்டுள்ளன. மர்பியின் உயர்ந்த செயலாக்கத்துக்கும், மக்கள் விரும்புவதற்கும் இதைவிடச் சிறந்த அத்தாட்சி வேறென்ன வேண்டும்!



**மர்பி** *இவ்வுலகை மகிழ்விக்கிறது!*

# பொன்னியின் செல்வன்




## நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

## வானதிக்கு அபாயம்

“அக்கா! ஐந்து வயதில் நான் காவேரி வெள்ளத்தில் மூழ்கியது நினைவிருக்கிறதா? காவேரித்தாய் என்னை எடுத்துக் காப்பாற்றிப் படகிலே விட்டு விட்டு மறைந்தது நினைவிருக்கிறதா?'' என்று அருள்வர்மன் கேட்டான்.

''இது என்ன கேள்வி தம்பி! எப்படி அதை நான் மறந்து விட முடியும்? 'பொன்னியின் செல்வன்' என்று உன்னை அழைத்து வருவதே அச்சம்பவத்தின் காரணமாகத்தானே?'' என்றாள் குந்தவை.

''என்னைக் காப்பாற்றிய காவேரித் தாயை இலங்கையில் நான் கண்டேன், அக்கா!... என்ன பேசாதிருக்கிறாயே? உனக்கு ஆச்சரியமாயில்லையா?''

''ஆச்சரியமில்லை தம்பி! ஆனால் ஆர்வம் நிறைய இருக்கிறது. அவளைப் பற்றி எல்லா விவரங்களையும் சொல்!''

'' ஒரு நாளில் ஒரு தடவையில் சொல்ல முடியாது. முக்கியமானதை மட்டும் சொல்லுகிறேன். காவேரி வெள்ளத்திலிருந்து என்னை அவள் காப்பாற்றியது மட்டுமல்ல; இலங்கையில் பல தடவை என் உயிரைக் காப்பாற்றியிருக்கிறாள். உயிரைக் காப்பாற்றியது பெரிதல்ல, அக்கா! எத்தனையோ பேர் தற்செயலாகப் பிறர் உயிரைக் காப்பாற்றுகிறார்கள். அவள் என்னிடத்தில் வைத்துள்ள அன்பு இருக்கிறதே, அதற்கு இந்த ஈரேழு பதினாலு உலகங்களும் இணையாகாது..ஏன்? நீ என்னிடம் வைத்துள்ள அன்பைக்கூட அடுத்தபடியாகத்தான் சொல்ல வேண்டும்!''

''அதைச் சொல்லுவதற்கு நீ தயங்க வேண்டாம். உன்னிடம் என் அன்பு

அவ்வளவு ஒன்றும் உயர்ந்தது அல்ல; சுய நலம் கலந்தது; உண்மையைச் சொல்கிறேன், தம்பி! எனக்கு இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் மேன்மைதான் முதன்மையானது. அதற்கு நீ பயன்படுவாய் என்றுதான் உன் பேரில் அன்பு வைத்திருக்கிறேன். அந்த நோக்கத்துக்கு நீ தடையா யிருப்பாய் என்று தெரிந்தால், என் அன்பு வெறுப்பாக மாறினாலும் மாறிவிடும். ஆனால் அந்த ஊமைச் செவிட்டு ஸ்திரீயின் அன்பு அத்தகையதல்ல. நம்முடைய தந்தையிடம் இருபது வருடங்களுக்கு மேலாக அவள் உள்ளத்தில் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்த அத்தனை அன்பையும் உன்பேரில் சொரிந்திருக்கிறாள். அதற்குப் பதினாறு உலகமும் இணையில்லைதான்!''

''உனக்கு அது எப்படித் தெரிந்தது அக்கா!''

''எதைச் சொல்கிறாய், தம்பி!''

''அவள் நம்முடைய பெரிய தாயார் என்பது?''

''தந்தை சொன்னதிலிருந்தும் வந்தியத்தேவர் சொன்னதிலிருந்தும் ஊகித்துக் கொண்டேன், தம்பி! அவள் உன்னைத் தன் சொந்த மகன் என்று எண்ணி யிருக்கிறாளா? அல்லது சக்களத்தியின் மகன் என்று எண்ணி யிருக்கிறாளா?''

''அந்த மாதிரி வேற்றுமையான எண்ணம் என் மனத்திலும் உதிக்கவில்லை; அவள் மனத்தில் என்னளவும் இருப்பதாகத் தெரியவில்லை. நீ ஏன் அம்மாதிரி வேற்றுமைப்படுத்திப் பேசுகிறாய்?''

''தம்பி! அந்த ஊமை ஸ்திரீ வீற்றிருக்க வேண்டிய சிங்காதனத்தில் இன்று நம் தாயார் வீற்றிருக்கிறாள். அது தெரிந்திருந்தும் அவள் உன்னிடம் அத்தனை அன்பு வைத்திருந்தால், அது மிக்க விசேஷமல்லவா?''

''நான் அவள் வயிற்றில் பிறந்த மகன் அல்ல என்பது அவளுக்குத் தெரிந்துதான் இருக்க வேண்டும். வயது வித்தியாசம் தெரியாமலா போகும்? அவளால் பேச முடியாது; மனத்தில் உள்ளதைச் சொல்ல முடியாது. ஏதோ சித்திரங்கள் எழுதிக் காட்டியதைக் கொண்டு எவ்வளவு தெரிந்து கொள்ளலாமோ அவ்வளவு தெரிந்து கொண்டேன். என்னிடம் அவளுடைய அன்பு இருக்கட்டும். நம் தந்தையிடம் அவள் எத்தகைய அன்பு வைத்திருக்க வேண்டும் என்பதை நினைத்தால் என் நெஞ்சு உடனே உருகி விடுகிறது. அக்கா! என்னுடைய பிராயத்தில் அப்பா என்னைப் போல இருப்பாரா?''

''இல்லை தம்பி, இல்லை! உன்னுடைய பிராயத்தில் நம் தந்தை மன்மதனைத் தோற்கடிக்கும் அழகுடன் விளங்கினார். நம்முடைய சோழ குலம் வீரத்துக்குப் பெயர் போனதே தவிர அழகுக்குப் பெயர் போனதல்ல. நம் பாட்டனார் அரிஞ்சய தேவர் அழகில் நிகரற்ற வைதும்பராயன் குலத்தில் பிறந்த கல்யாணியை மணந்



தார். கல்யாணியை அரிஞ்சயர் மணந்த போது அவள் பத்தரை மாற்றுப் பசும் பொன்னொத்த மேனியும் பூரணச் சந்திரனை யொத்த முகமும் கொண்ட புவனமோகினியாக விளங்கினாள். தற்சமயம் இத்தனை வயதான பிறகும் கல்யாணிப் பாட்டி எவ்வளவு அழகா யிருக்கிறாள் என்பதை நீயே பார்த்திருக்கிறாய். அதனால் நமது தந்தையும் அவ்வளவு அழகுடன் இருந்தார்; 'சுந்தர சோழர்' என்ற பட்டப் பெயரும் பெற்றார். நாம் நம்முடைய தாயாரைக் கொண்டு பிறந்திருக்கிறோம். திருக்கோவலூர் மலையமான் வம்சத்தில் பிறந்தவர்கள் அழகை வெறுப்பவர்கள்; அழகு வீரத்துக்குச் சத்துரு என்று நினைப்பவர்கள்..."

"அழகுக்கும் வீரத்துக்கும் என்ன சம்பந்தம் உண்டோ என்னவோ, எனக்குத் தெரியாது. ஆனால் அழகுக்கும் அன்புக்கும் சம்பந்தமில்லை என்பதை அறிவேன். இல்லாவிடில்..."

"இல்லாவிடில் இந்தப் பெண் வானதி எதற்காக உன்னைத் தூண் மறைவிலிருந்து கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறாள்? அதோ அந்தப் படகில் சேந்தன் அமுதன் பூங்குழலியை ஏன் கண்கொட்டாமல்பார்த்துப் பரவசமடைந்து கொண்டிருக்கிறான்?"

இளவரசர் புன்னகை புரிந்து, "அக்கா! நீ எதிலிருந்தோ எதற்கோ போய் விட்டாய்.



என் பெரியன்னை என்னிடம் வைத்துள்ள அன்பைக் குறித்துச் சொன்னேன். அது போனால் போகட்டும்; இவ்வுலகில் ஒருவரைப்போல் இன்னொருவர் தத்ரூபமாக இருப்பது என்பது சாத்தியமா அக்கா?''

''ஏன் சாத்தியமில்லை? இரட்டைப் பிள்ளைகளாயிருந்தால் அது சாத்தியம். அல்லது தாயும் மகளும் ஒரே பிராயத்தில் ஒரே மாதிரி இருப்பது சாத்தியந்தான். இதைத் தவிர பிரம்ம சிருஷ்டியில் ஒருவர்க்கொருவர் சம்பந்தமேயில்லாதவர்கள் அபூர்வமாகச் சில சமயம் ஒரே மாதிரி இருப்பதும் உண்டு.''

''பழுவூர் இளைய ராணியும் இலங்கையில் நான் பார்த்த பெரியன்னையும் ஒரே மாதிரி இருப்பதாக வந்தியத் தேவர் சொல்வது உண்மையாயிருக்க முடியுமா? நந்தினி சிறு பெண்ணாயிருந்த போதுதான் நான் பார்த்திருக்கிறேன். பழுவூர் இளைய ராணியான பிறகு நன்றாய்ப் பார்த்ததில்லை. உனக்கு என்ன தோன்றுகிறது?''

''நான் பழுவூர் ராணியைப் பார்த்திருக்கிறேனே தவிர, நம் பெரியம்மாவைப் பார்த்ததில்லை. ஆனால் வந்தியத் தேவர் கூறியது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். என் தந்தை கூறிய வரலாற்றிலிருந்து அதைத் தெரிந்து கொண்டேன், தம்பி!''

''தந்தையே கூறினாரா உன்னிடம்? என்ன கூறினார்? எப்போது கூறினார்?''

''சில நாளைக்கு முன்பு நானும் வானதியும் தஞ்சைக்குப் போயிருந்தோம். அப்போது தம் இளம் பிராயத்தில் நடந்த சம்பவத்தைக் கூறினார். இலங்கைக்கு அருகில் உள்ள ஒரு தீவில் தாம் தனியாக ஒதுக்கப்பட்டதையும், அத்தீவில் ஓர் ஊமைப் பெண் தம்மிடம் காட்டிய அன்பைப் பற்றியும் கூறினார். பராந்தகர் அனுப்பிய ஆட்கள் தம்மை அத் தீவில் கண்டுபிடித்து அழைத்து வந்ததைப் பற்றிச் சொன்னார். தமக்கு இளவரசுப் பட்டம் சூட்டிய அன்று அரண்மனை வாசலில் நின்ற கூட்டத்தில் அவளைப் பார்த்தாராம். அடுத்த கணம் அவள் மறைந்து விட்டாளாம். அவளைத் தேடி அழைத்து வர முதன் மந்திரி அநிருத்தரையே அனுப்பினாராம். ஆனால் அந்தப் பெண் கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து கடலில் குதித்து இறந்து விட்டாள் என்று அநிருத்தர் வந்து கூறினாராம். இந்தச் சம்பவம் நம் தந்தையின் உள்ளத்தில் இருபத்தி நாலு வருஷங்களாக இருந்து அல்லும் பகலும் வேதனை அளித்துக் கொண்டிருக்கிறது என்பதை அறிந்தேன். அவள் இறந்து விட்டதாகவே தந்தை நினைத்துக் கொண்டிருக்கிறார். தம்மால், தமது குற்றத்தால், அவள் மனம் புண்பட்டு உயிரை விட்டு விட்டதாகவும் எண்ணிக் கொண்டிருக்கிறார். தம்பி! சோழ சாம்ராஜ்யத்தைப் பற்றி நம் மனக்கோட்டையெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும். நீயும் நானுமாக முயன்று நம் தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமை ஒன்று இருக்கிறது. நீ எப்படியாவது இலங்கையிலிருந்து அம்மாதரசியைத் தஞ்சைக்கு அழைத்து வர வேண்டும். தந்தையிடம் 'அவள் இறந்து விடவில்லை. உயிரோடு இருக்கிறாள்' என்பதை நேரில் நிரூபித்துக் காட்ட வேண்டும். இல்லாவிட்டால், நம் தந்தைக்கு இந்த ஜன்மத்திலும் மனச் சாந்தி இல்லை, மறு ஜன்மத்திலும் அவருக்கு நிம்மதியிருக்க முடியாது !''

''அக்கா! சமீபத்தில் நான் இரண்டு மூன்று தடவை மரணத்தின் வாசல் வரையில் சென்று திரும்பினேன். அப்போதெல்லாம் என் மனத்தில் தோன்றிய எண்ணம் என்ன தெரியுமா ? பெரியம்மாவைத் தந்தையிடம் அழைத்துப் போய் விடாமல் செத்துப் போகிறோமே என்ற ஏக்கந்தான். அக்கா ! அந்த மாதரசியை நினைத்தாலும் என் உள்ளம் குமுறுகிறது. வாயிருந்தால் மனத்திலுள்ள குறைகளையும் வேதனைகளையும் வெளியிட்டுச் சொல்லி ஆறுதல் அடையலாம். காது இருந்தால் பிறர் கூறும் ஆறுதல் மொழிகளைக் கேட்டுத் துக்கம் தீரலாம். வாயும் செவியும் இல்லாத ஒருத்தியினுடைய நிலையை எண்ணிப் பார்! உள்ளத்தில் குமுறும் அன்பையும் ஆர்வத்தையும் துன்பத்தையும் வேதனையையும் கோபத்தையும் தாபத்தையும் எல்லாவற்றையும் மனத்துக்குள்ளே அடக்கி வைத்திருக்க வேண்டும். அதிலும் நம் பெரியன்னையைப் போல் ஆசாபங்கம் அடைந்தவளின் மனோ நிலையைப் பற்றிச் சொல்ல வேண்டுமா ? அவள் பைத்தியக்காரியைப் போல் இலங்கைத் தீவின் காடுகளில் சுற்றித் திரிந்து கொண்டிருப்பதில் வியப்பென்ன? அதையெல்லாம் நினைக்க நினைக்க என் நெஞ்சம் வெடித்து விடும் போலிருக்கிறது. அவளை எப்படியாவது அழைத்து வந்து தந்தையிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்ற ஆர்வம் உண்டாகிறது. ஆனால், நம் தந்தை அதை விரும்புவார் என்று நினைக்கிறாயா, அக்கா ?''

''தந்தை விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, நம்முடைய கடமை அது. தம்பி! இறந்து போனவளின் ஆவி வந்து தம்மைத் துன்புறுத்துவதாக எண்ணி இரவு நேரங்களில் நம் தந்தை

அலறுகிறார். இதனாலேயே அவர் உடம்பும் குணமடைவதில்லை.''

''இது எப்படி உனக்குத் தெரிந்தது, அக்கா! இதுவும் தந்தை சொன்னாரா?''

''தந்தையும் சொன்னார்; என் தோழி வானதியும் சொன்னாள்.''

''வானதி சொன்னாளா? அவளுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம், அக்கா! நீ அவளிடம் சொன்னாயா, என்ன?''

''இல்லை, இல்லை! தஞ்சை அரண்மனையில் ஒரு நாள் நிகழ்ந்ததை அவள் வாய் மொழியாகவே சொல்லச்சொல்கிறேன். இருந்தாலும் நீ ரொம்பப் பொல்லாதவன் தம்பி! சோழர் குலத்தின் பண்பாட்டையே மறந்துவிட்டாய்! கொடும்பாளூர் இளவரசியிடம் ஒரு வார்த்தை பேசவும் இல்லை; சௌக்கியமாக இருக்கிறாயா என்று கேட்கக்கூட இல்லையே? மகா வீரரான சிறிய வேளாரின் புதல்விக்கு நீ செய்யும் மரியாதை இதுதானா? அழகாயிருக்கிறது!''

''அக்கா! வானதியைக் கவனித்துக் கொள்ள நீ இருக்கும் போது கவலை என்ன? சௌக்கியமா என்று நான் விசாரிப்பதுதான் என்ன?''

''ரொம்ப சரி; சற்று வாயை மூடிக் கொண்டிரு! வானதி! இங்கே வா! உன்னை இளவரசன் நன்றாய்ப் பார்க்க வேண்டுமாம்!'' என்றாள் குந்தவை.

வானதி அருகில் வந்தாள். இளவரசரைப் பார்த்தும் பாராமலும் நின்று கொண்டு ''அக்கா! எதற்காகக் கற்பனை செய்து கூறுகிறீர்கள்! தங்கள் தம்பி என்னைப் பார்க்க விரும்ப வில்லை. அவர் பார்வை யெல்லாம் அதோ ஓடையில் இருக்கும் ஓடத்தின் மேலேயே இருக்கிறது. அவசரமாகத் திரும்பிப் போக வேண்டும் போலிருக்கிறது!'' என்று பட்டுப் போன்ற மிருதுவான குரலில் கூறினாள். ஓடத்தில் இருந்த பூங்குழலியை நினைத்துக் கொண்டு, ஓடத்தைக் குறிப்பிட்டாள் போலும்!

இளவரசன் நகைத்துக் கொண்டே, ''அக்கா! உன் தோழிக்குப் பேசத் தெரிகிறதே. நம் குடும்பத்தைச் சேர்ந்த ஊமைகளுடன் இவளும் ஒரு ஊமையோ என்று பயந்து போனேன்!'' என்றான்.

''அக்கா! இவரைப் பார்த்தால் எனக்குப் பேச வருகிறதில்லை. எனக்கே நான் ஊமையாய்ப் போய்விட்டேனோ என்று பயம் உண்டாகிறது!'' என்றாள் வானதி.

''அது ரொம்ப நல்லது. கோடிக்கரையில் ஒருவன் இருக்கிறான். பூங்குழலியின் தமையன். அவன் மற்றவர்களிடம் ஒருவாறு தெத்தித் தெத்திப் பேசுகிறான். ஆனால் அவன் மனைவியைக் கண்டால் ஊமையாகி விடுகிறான். அதனால் அவனை அவன் வீட்டார் ஊமை என்றே வைத்து விட்டார்கள்'' என்றான் இளவரசன்.

''இந்தக் கொடும்பாளூர்ப் பெண் கொஞ்சம் அந்த மாதிரிதான். முன்னேயெல்லாம் இவளைச் சற்று நேரம் பேசாமல் சும்மா இருக்கச் சொன்னால் இவளால் முடியவே முடியாது. பேச ஆரம்பித்தால் நிறுத்தவே மாட்டாள். நீ முதன் முதலில் இலங்கைக்குப்போனாயே, அது முதல் இவளுடைய பேச்சுக் குறைந்து விட்டது. தனியாகத் தனியாகப் போய் உட்கார்ந்து கொண்டு எதையோ எண்ணிக் கொண்டிருக்கிறாள். அது போனால் போகட்டும். வானதி! அன்று இரவு தஞ்சை அரண்மனையில் நடந்ததை யெல்லாம் இளவரசனுக்கு விவரமாகச் சொல்லு!'' என்றாள் குந்தவை.

''கொடும்பாளூர் இளவரசி உட்கார்ந்து கொண்டு சொல்லட்டும், அக்கா! இவள் இத்தனை நேரம் நிற்பதைப் பார்த்தால் இவளுடைய பெரிய தந்தை உருகிப் போய் விடுவார். தென் திசைச் சேநாதிபதி என்னைப் பார்க்கும் போதெல்லாம் இவளைப் பற்றி விசாரிப்பார். நீயோ இவளைப் பற்றி ஒன்றுமே சொல்லி அனுப்புவதில்லை. ஆகையால், நான் அவருக்குப் பதில் சொல்ல முடியாமல் திண்டாடுவேன்'' என்றான் இளவரசன்.

''வாணர் குலத்து வீரரிடம் இவளைப் பற்றி விவரமாய்ச் சொல்லி அனுப்பினேனே, அவர் ஒன்றும் உன்னிடம் சொல்லவில்லையா?''

''அவர் சொல்லித்தான் இருப்பார், அக்கா! இவர் காதில் ஒன்றும் விழுந்திராது. இவருக்கு எத்தனையோ ஞாபகம்!'' என்றாள் வானதி.

''அதுவும் உண்மைதான். உன்னுடைய ஓலையைப் பார்த்த பிறகு வேறு ஒன்றிலும் என் மனம் செல்ல வில்லை. இந்த சுரத்துக்குப் பிறகு என் காது கூடக் கொஞ்சம் மந்தமாயிருக்கிறது. உன் தோழியை உரக்கப் பேசச் சொல்லு!'' என்றான் அருள்வர்மன்.

பிறகு, வானதி தஞ்சை அரண்மனையில் குந்தவை துர்க்கை கோயிலுக்குப் போன பிறகு தான் தனியே மேன்மாடத்தில் உலாவச் சென்றதையும், சக்கரவர்த்தியின் அபயக் குரல் கேட்டதையும், அந்த இடத்துக்குத் தான் சென்று கீழே எட்டிப் பார்த்ததையும், அங்கே தான் கண்ட காட்சியையும் கூறினாள். இடையிடையே வானதி இளவரசனின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க நேர்ந்த போதெல்லாம் மெய்ம்மறந்து நின்று விட்டாள். இளையபிராட்டி அவளை ஒவ்வொரு தடவையும் தூண்

டிப் பேசும்படி செய்வது அவசியமாயிருந்தது.

எல்லாவற்றையும் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த இளவரசன், கடைசியாகத் தமக்கையை நோக்கி, "அக்கா! உன் தோழி முக்கியமான ஒரு சம்பவத்தை விட்டு விட்டாள் போலிருக்கிறதே! இவ்வளவையும் பார்த்துக் கேட்ட பிறகு இவள் மூர்ச்சை அடைந்து விழுந்திருக்க வேண்டுமே?" என்றான்.

குந்தவை சிரித்தாள்; வானதி நாணத்துடன் தலை குனிந்து நின்றாள்.

குந்தவை அவளை அன்பு ததும்பிய கண்களினால் பார்த்து, "வானதி! நீ சற்று நேரம் ஓடைக்கரையோடு உலாவி விட்டு வா! இல்லாவிட்டால், நம் பரிவாரங்கள் இருக்குமிடத்துக்குப் போயிரு! அருள்வர்மன் இன்னும் சில நாள் இங்கேயேதான் இருப்பான். மறுபடியும் சந்திக்கலாம்!" என்றாள்.

"ஆகட்டும், அக்கா! உலாவி விட்டு வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டு வானதி துள்ளிக் குதித்துச் சென்றாள். திடீரென்று அவ்வளவு குதூகலம் அவளுக்கு எப்படி ஏற்பட்டதோ, தெரியாது.

மலர்ந்த முகத்தோடும் விரிந்த கண்களோடும் அவள் போவதைப் பார்த்துக் கொண்டிருந்த அருள்வர்மன், அவள் மறைந்ததும் தமக்கையை நோக்கினான்.

"அக்கா! தந்தையின் புலம்பலின் காரணம் எனக்குத் தெரிகிறது. ஆனால் அவர் கண்ட காட்சியைப் பற்றி உன் கருத்து என்ன? அவர் முன்னால் காணப்பட்ட தோற்றம் என்னவாயிருக்கக் கூடும்? தந்தையின் மனப் பிரமையா? அப்படியானால் உன் தோழிக்கும் அந்தப் பிரமை எப்படி ஏற்பட்டிருக்கும்?"

"தந்தை கண்டதும் பிரமை அல்ல; வானதி கண்டதும் மாயத் தோற்றம் அல்ல. தந்தை முன் நடந்தது நள்ளிரவு நாடகம். அதில் முக்கிய பாத்திரமாக நடித்தவள் பழுவூர் இளைய ராணி நந்தினி. இதை அப்போதே நான் ஊகித்துத் தெரிந்து கொண்டேன். வந்தியத் தேவரும் நீயும் சொன்ன விவரங்களுக்குப் பிறகு அது உறுதியாயிற்று...."

"அந்த நாடகத்துக்குக் காரணம் என்ன? பழுவூர் ராணி எதற்காக அப்படிச் செய்ய வேணும், அக்கா?"

"நந்தினிக்குத் தன் பிறப்பைக் குறித்துச் சந்தேகம் உண்டு. சக்கரவர்த்தி தன்னைப் பார்த்து முன்னொரு தடவை நினைவிழந்ததை அவள் அறிவாள். அதற்குப் பிறகு அவள், தந்தை முன்னால் வருவதே இல்லை. இப்படி ஒரு நாடகம் நடத்தினால் ஏதாவது உண்மை கண்டறியலாம் என்று செய்திருக்கிறாள்...."

"தெரிந்திருக்குமா, அக்கா?"

"அதை நான் அறியேன். நந்தினியின் உள்ளத்தை அவளைப் படைத்த பிரம்ம தேவனாலும் கண்டறிய முடியாது. பழுவேட்டரையர் அவளிடம் படும் பாட்டை நினைத்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. தம்பி! சற்று முன் அழகைப் பற்றிப் பேசினேன் அல்லவா? பெண்களில் அழகி என்றால், நந்தினிதான் அழகி. நாங்கள் எல்லாரும் அவள் கால் தூசி பெற மாட்டோம். நந்தினி முன்னால் எதிர்ப்பட்ட புருஷர்கள் அவளுக்கு அக்கணமே அடிமையாகி விடுகிறார்கள். பழுவேட்டரையர், மதுராந்தகன், திருமலையப்பன், கந்தமாறன், கடைசியாக, பார்த்திபேந்திரன்! அவளுடைய அழகுக்குப் பயந்து கொண்டு முதன் மந்திரி அநிருத்தர் அவள் பக்கத்திலேயே போவதில்லை. ஆதித்த கரிகாலன் அதனாலேயே தஞ்சைக்கு வருவதில்லை. தம்பி! நந்தினியின் சௌந்தரியத்துக்கு அஞ்சாமல், அவளிடம் தோற்றுப் போகாமல் மிஞ்சி வந்தவர், ஒரே ஒருவர்தான்!...."

"வாணர் குலத்து வீரரைத்தானே சொல்லுகிறாய்?"

"ஆம்! அவர்தான்! அதனாலேயே தான் அவரைக் காஞ்சிக்கு ஆதித்த கரிகாலனிடம் அனுப்பியிருக்கிறேன்."

"எதற்காக?"

"பழுவூர் ராணி கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்கு வரும்படி நம் தமையனுக்குச் சொல்லி அனுப்பியிருக்கிறாள். அவர்களுடைய சந்திப்பைத் தடுப்பதற்காக அனுப்பியிருக்கிறேன். அப்படிச் சந்தித்தாலும் விபரீதம் எதுவும் நேராமல் பாதுகாப்பதற்கு அனுப்பியிருக்கிறேன். கரிகாலனுக்கு நந்தினி நம் தமக்கை என்று தெரியாது. நந்தினி நம் உறவைக் கண்டு கொண்டாளா என்பதையும் நான் அறியேன்."

"அவள் நம் தமக்கை என்பது நிச்சயந்தானா, அக்கா?"

"அதில் என்ன சந்தேகம்? தம்பி! அதை நான் அறிந்ததிலிருந்து என்னுடைய மனத்தை அடியோடு மாற்றிக் கொண்டுவிட்டேன். நாம் குழந்தைகளாயிருந்த போது நந்தினியை நான் வெறுத்தேன்; அவமதித்தேன். அவள் அழகைக் கண்டு பொறாமைப்பட்டேன். நீயும் கரிகாலனும் அவளோடு பேசவுங் கூடாது என்று திட்டம் செய்தேன். அவள் பாண்டிய நாட்டுக்குப் போன பிறகும் அவளிடம் நான் கொண்டிருந்த அருவருப்பும் வெறுப்பும் அப்படியே

இருந்தன. பழுவூர்க் கிழவரை மணம் செய்து கொண்டு திரும்பி வந்த பிறகு எத்தனையோ தடவை அவளைப் பரிகசித்து அவமானப்படுத்தினேன். அதற்கெல்லாம் பிராயச்சித்தம் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன்...''

''எப்படி, அக்கா! என்ன மாதிரி பிராயச்சித்தம் ?''

''அடுத்த தடவை அவளைச் சந்திக்கும் போது அவள் காலில் விழுந்து என்னுடைய குற்றங்களை யெல்லாம் மன்னிக்கும்படி கேட்டுக்கொள்வேன். அதற்காக என்ன தண்டனை விதித்தாலும் ஏற்றுக் கொள்வேன்...''

''அதை நான் தடுப்பேன். நீ ஒரு குற்றமும் செய்யவில்லை. நீ யாரிடமும் மன்னிப்புக் கேட்க வேண்டிய அவசியமும் இல்லை. இந்த ஈரேழு பதினாலு உலகத்தில் உனக்குத் தண்டனை கொடுக்கக் கூடியவர்கள் யாரும் இல்லை. நீ பழுவூர் இளையராணி நந்தினியைப் பார்த்து அசூயைப்படவில்லை. அவள்தான் உன்னைப் பார்த்துப் பொறாமைப்பட்டாள். அவள்தான் உன்னை வெறுத்தாள்....''

''தம்பி! இலங்கையில் பைத்தியக்காரியைப்போல் திரியும் நம் பெரியம்மாவை நினைத்து நீ நெஞ்சம் குமுறுவதாகச் சொன்னாய். அரண்மனையில் சகல சுக போகங்களுடன் வாழ்ந்திருக்கவேண்டிய நந்தினி எப்படியெல்லாம் வாழ்க்கையில் கஷ்டப்பட்டாள் என்பதை நினைக்கும் போது என் இதயம் பிளந்து போகும் போலிருக்கிறது. யாரோ, எப்பொழுதோ செய்த தவறுகளின் காரணமாக, எனக்கு முன் பிறந்த தமக்கை இந்தக் கிழவர் பழுவேட்டரையரை மணக்க நேர்ந்து விட்டது....''

''அக்கா! இதெல்லாம் எப்படி நேர்ந்திருக்கும் என்று உனக்கு ஏதாவது தெரிகிறதா? நம் பெரியம்மா இறந்து விட்டதாகத் தந்தை எண்ணுவதற்குக் காரணம் என்ன? நந்தினி அநாதையைப் போல் எங்கேயோ, யார் வீட்டிலோ வளர்ந்து, இந்த நிலைமைக்கு வருவதற்குக் காரணம் என்ன?....''

''அதைப்பற்றி யெல்லாம் நான் இரவும் பகலும் யோசித்து வருகிறேன். ஆனால் இன்னமும் நிச்சயமாய்க் கண்டு பிடிக்க முடியவில்லை. அந்த இரகசியங்களை அறிந்தவர்கள் இப்போது இரண்டு பேர் நமக்குத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள். நம்முடைய பாட்டி செம்பியன் மாதேவிக்கு ஏதோ விஷயம் தெரிந்திருக்கிறது. முதன் மந்திரி அநிருத்தருக்கு எல்லா விஷயமும் தெரிந்திருக்கும் எனத் தோன்றுகிறது. ஆனால் அவர்கள் இரண்டு பேரிடமிருந்தும் நாம் எதுவும் தெரிந்து கொள்ள முடியாது. அநிருத்தருடைய சீடன் ஆழ்வார்க்கடியானுக்கும் ஓரளவேனும் தெரிந்திருக்க வேண்டும். அவன் குருவை மிஞ்சியவன்; வாயைத் திறக்க மாட்டான். தம்பி! அதையெல்லாம் கண்டுபிடிப்பதற்கு இப்போது அவசரமும் இல்லை. நந்தினியினால் நம் குலத்துக்கு விபரீதமான அபாயமும் அபகீர்த்தியும் ஏற்படாமல் தடுப்பதுதான் இப்போது முக்கியம். வந்தியத்தேவர் சொன்னார்: பழுவூர் ராணி, மீன் சின்னம் பொறித்த மின்னலைப் போல் ஒளிரும் வாள் ஒன்றை வைத்துப் பூஜை செய்து கொண்டிருக்கிறாள் என்று. அதைக் கேட்டதிலிருந்து என் நெஞ்சு பதைத்துக் கொண்டேயிருக்கிறது. தான் பிறந்த குலம் சோழ குலம் என்பதை அறியாமல் பழுவூர் ராணி ஏதாவது செய்துவிடப் போகிறாளே என்று கவலையாயிருக்கிறது.''

''பழுவூர் ராணியிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டால், என்ன?''

''சொன்னாலும் என்ன பயன் ஏற்படுமோ, தெரியாது. நம்மிடமெல்லாம் அவளுடைய கோபம் அதிகமானாலும்




## வெற்றிச் சிகரத்தில் ஒரு சிக்கல்!

லண்டனில் உள்ள டெய்லி நியூஸ் பத்திரிகை விளையாட்டுக்களில் ஈடுபடும் பெண்கள் பற்றிக் குறிப்பிடுகையில், ''எத்தனை திறமையும் வலிமையும் உள்ள பெண்ணானாலும் ஆண்களைவிட ஒரு படி இறக்கம் தான்!'' என்று குறிப்பிட்டிருந்தது. இதை எழுதிப் பத்திரிகை வெளிவந்த சூட்டோடு அந்தப் பத்திரிகை வெட்கப்படும்படியாக ஒரு காரியம் நடந்தது.

1926ம் வருஷம் ஒரு செயற்கரிய சாதனையைப் பெண்ணொருத்தி செய்தாள். பத்தொன்பது வயதுள்ள அமெரிக்கப் பெண்மணி கெர்ட்ரூட் எடர்லி ஆங்கிலக் கால்வாயை (English Channel) பதினைந்து மணி நேரம் முப்பத்தொரு நிமிஷங்களில் நீந்திக் கடந்தாள். அவளுக்குப் பயிற்சி அளித்தவர் யார் தெரியுமா? ராபர்ட் புருஸைப்போல் பதினெட்டு தடவைகள் முயன்று தோல்வியுற்று, 1911ம் ஆண்டில் ஆங்கிலக் கால்வாயைக் கடந்த வில்லியம் பர்கஸ் என்ற ஆங்கிலேயர்!

அவள் பதினொரு மணி நேரம் இடைவிடாது நீந்திய பிறகு கடலில் கொந்தளிப்பு மிகுந்தது. படகிலிருந்த பயிற்சியாளர் பர்கஸ் ''எடர்லி! நீச்சலை நிறுத்திவிட்டு வந்து விடு!'' என்று ஆலோசனை கூறினார். ஆனால் எடர்லி எடுத்த காரியத்தை முடித்தே காட்டினாள். இங்கிலாந்தில் மக்களின் குதூகல ஆரவார வரவேற்புக்கிடையே கரை ஏறினாள். ஆனால் அவளுக்குக் காத்திருந்த மாபெரும் வரவேற்பை ஒரே ஒரு நபர் மூன்று மணி நேரம் தாமதம் செய்வதில் வெற்றி கண்டார்! அவர் தான் பாஸ்போர்ட் அதிகாரி. இங்கிலாந்துக்குள் நுழைவதற்கான அரசாங்க அனுமதி அவளிடம் இல்லை என்று தடுத்து விட்டார்!

—குண்டுமணி

ஆகும். ஆனால் நமது கடமையை நாம் செய்துவிட வேண்டியதுதான்!''

''அதற்காக வந்தியத்தேவரை நீ அனுப்பியிருப்பது சரிதான். ஆனால் தந்தையிடமும் தெரிவிக்க வேண்டாமா? அவர் எதற்காக உடல் வேதனை போதாதென்று மன வேதனையையும் பட்டுக் கொண்டிருக்க வேண்டும்? நாம் உடனே தஞ்சைக்குப் புறப்படலாம் அல்லவா?''

''கூடவே கூடாது, தம்பி! இரண்டு நாளில் தஞ்சைக்கு நான் புறப்படுகிறேன். ஆனால் இந்தச் சூடாமணி விஹாரத்தில்தான் நீ இன்னும் சில காலம் இருக்க வேண்டும்.''

''ஏன் அப்படிச் சொல்கிறாய்? தந்தையின் கட்டளையை மீறி என்னை இங்கே இன்னமும் ஒளிந்து மறைந்து வாழச் சொல்கிறாயா?''

''ஆம்; நீ இப்போது தஞ்சைக்கு வந்தால் நாடெங்கும் ஒரே குழப்பமாகி விடும். மக்கள் மதுராந்தகர் மீதும் பழுவேட்டரையர்கள் மீதும் ஒரே கோபமாயிருக்கிறார்கள். உன்னைச் சிறைப்படுத்திக் கொண்டு வரச் சொன்னதற்காகச் சக்கரவர்த்தி மீதுகூட ஜனங்கள் கோபமாயிருக்கிறார்கள். உன்னை இப்போது கண்டால், மக்களின் உணர்ச்சி வெள்ளம் பொங்கிப் பெருகும். அதன் விளைவுகள் என்ன ஆகுமோ தெரியாது. உடனே உனக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்று ஜனங்கள் கூச்சல் போட்டாலும் போடுவார்கள். தஞ்சைக் கோட்டையையும் அரண்மனையையும் முற்றுகை போடுவார்கள். ஏற்கனவே மனம் புண்பட்டிருக்கும் தந்தையின் உள்ளம் மேலும் புண்ணாகும். தம்பி! இராஜ்யத்துக்கு ஆபத்து வந்திருக்கிறது என்று உன்னை நான் வரச் சொல்லி ஓலை எழுதினேன். அதே காரணத்துக்காக இப்போது நீ திரும்பி இலங்கைக்குப் போய் விட்டால் நல்லது என்று நினைக்கிறேன்....''

''அக்கா! அது ஒரு நாளும் இயலாத காரியம். நம் தந்தையைப் பார்க்காமல் நான் திரும்பிப் போக மாட்டேன். தஞ்சைக்கு நான் இரகசியமாக வருவது நல்லது என்று நினைத்தால் அப்படியே செய்கிறேன். ஆனால் சக்கரவர்த்தியை நான் பார்த்தேயாக வேண்டும். அவரிடம் என்னைக் காப்பாற்றிய காவேரி அம்மன் யார் என்பதைச் சொல்ல வேண்டும்.''

''அதையெல்லாம் நானே சமயம் பார்த்துச் சொல்லி விடுகிறேன். நீ வந்துதான் தீர வேண்டுமா?''

''நேரில் பார்த்த நானே சொன்னால், தந்தைக்குப் பூரண நம்பிக்கை ஏற்படும்; என் மனமும் ஆறுதல் அடையும். பெரியம்மாவை அழைத்துக் கொண்டு வருவதற்கு அவருடைய அனுமதியையும் பெற்றுக் கொள்வேன்....''

''அருள்வர்மா! உன் இஷ்டத்துக்கு நான் குறுக்கே நிற்கவில்லை. ஆனால் இன்னும் ஒரு வார காலம் சூடாமணி விஹாரத்தில் இரு. நான் முன்னதாகத் தஞ்சைக்குப் போகிறேன். நீ வந்திருப்பதைத் தந்தையிடம் அறிவித்து விட்டுச் செய்தி அனுப்புகிறேன். தம்பி! நான் இங்கே உன்னைத் தேடி வந்தது உன்னைப் பார்ப்பதற்காக மட்டுமல்ல; உன்னிடம் ஒரு வரம் கோரிப் பெறுவதற்காக வந்தேன். அதை நிறைவேற்றி வைத்து விட்டால், பின்னர் உன்னைத் தொந்தரவு செய்ய மாட்டேன். அபாயத்துக்குப் பயந்து ஒளிந்திருக்கும்படியும் சொல்ல மாட்டேன். ஆண் பிள்ளைகள் அபாயத்துக்கு உட்பட வேண்டியவர்கள்தான். வீர சௌரிய பராக்கிரமங்களில் இணையில்லாதவன் என நீ புகழ்பெற வேண்டும் என்பதுதான் என் ஆசை. ஆனால் மறுபடியும் உன்னை அபாயத்துக்கு உட்படுத்திக் கொள்ளுவதற்கு முன்னால் என்னுடைய கோரிக்கையை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும்....''

''இவ்வளவு பெரிய பீடிகை எதற்கு, அக்கா! நீ சொல்லுவதை என்றைக்காவது நான் மறுத்ததுண்டா?''

''மறுத்ததில்லை; அந்த நம்பிக்கையோடுதான் இப்போதும் கேட்கிறேன். ஆதித்த கரிகாலன் கலியாணம் செய்து கொள்ளவில்லை; கலியாணம் செய்து கொள்வான் என்றும் தோன்றவில்லை. சுந்தர சோழரின் குலம் உன்னாலேதான் விளங்க வேண்டும். என் விருப்பத்தை இந்த ஒரு விஷயத்தில் நீ நிறைவேற்றி வைக்க வேண்டும்....''

''உன் விருப்பத்தை நிறைவேற்ற நான் சம்மதித்தால், எனக்குப் பிரியமான பெண்ணை மணந்து கொள்ள நீ சம்மதம் கொடுப்பாய் அல்லவா?''

''இது என்ன இப்படிக் கேட்கிறாய்? இருபது ஆண்டுகளாக நம் விருப்பங்கள் மாறுபட்டதில்லை. இதிலே மட்டும் தனியாக எதற்குச் சம்மதம் கேட்கிறாய்?''

''அக்கா! அதற்குக் காரணம் இருக்கிறது. நான் மணந்து கொள்ளும் பெண் நான் காணும் பகற் கனவுகளை நிறைவேற்றுவதற்கு ஒத்தாசையாயிருக்க வேண்டும் அல்லவா?''

''தம்பி! உன் பகற் கனவுகளை ஒரு பெண்ணின் ஒத்தாசை கொண்டு நிறைவேற்றிக் கொள்ளவா ஆசைப்படுகிறாய்?'' என்றாள் குந்தவை.

அச்சமயத்தில், ''ஐயோ! ஐயோ! அக்கா! அக்கா!'' என்ற அபயக் குரல் கேட்டது. குரல் வானதியின் குரல்தான்.

(தொடரும்)


வர்ணமென்ன...
ஜாலமென்ன...
கோலமென்னவோ!
டாடா டெக்ஸ்டைல்ஸின் அழகுமிக்க
பிரிண்டட் பாப்ளின்களைக் கண்டதும் நெஞ்சில்
ஆயிரம் எண்ணங்கள் உதயமாகின்றன.
எத்தனை விதமான வர்ணஜாலங்கள்;
எண்ணங்கவரும் பிரிண்ட்கள் கமீஸாக
தைத்தாலும் கவர்ச்சிதான்—
இல்லை வேறு விதமான அணிகளுக்கும் உகந்ததுதான்.
மாதந்தோறும் பத்துவித புத்தம் புதிய பிரிண்டுகள்.
'டெரின்-காட்டன்' 2x2, மற்றும் கேம்ப்ரிக்
திணுசுகள் வெளி வந்துகொண்டே இருக்கின்றன.
இதயம் கவர்ந்ததை எடுத்தணிவீர்.
TATA Textiles
ULKA TT-122 TH

“ஆட்சியில் உள்ளோரைக் குறை கூறித் திருத்துவதை மக்கள் என்று நிறுத்திவிடுகிறார்களோ அன்று ஒரு துக்க நாளாகும். ஏனெனில் மக்கள் குறை கூறித் திருத்தா விட்டால் ஆட்சியில் உள்ளோர் மமதை கொண்டு அடிக்கடி தவறு செய்வார்கள்” என்றார் நேருஜி. ஸ்ரீ ஜவாஹர்லாலின் இந்தப் பொன்மொழியை ஆரம்பத்தில் போட்டுத் தம் கட்டுரையைத் தொடங்கியிருக்கிறார் தளபதி கரியப்பா. மே 7ந் தேதி இந்தியன் எக்ஸ்பிரஸில் வெளியான இந்தக் கட்டுரையை அதன் முக்கியத்துவம் கருதித் தமிழாக்கம் செய்து இங்கு வெளியிடுகிறோம். — ஆசிரியர்.

# ராஷ்டிரபதியின் ஆணைக்குட்பட்ட ராணுவ ஆட்சி

**தளபதி கே. எம். கரியப்பா**

சென்ற மார்ச் மாதம் 8ந் தேதியன்று தான்பாத் நகரில் நான் பத்திரிகை நிருபர்களுடன் பேசியபோது சில அரசியல் கருத்துக்களைத் தெரிவித்தேன். அவற்றில் அரைகுறையாகப் பிரசுரமான சில கருத்துக்களை மட்டும் தனித்து எடுத்துக் கொண்டு, அவை ஆட்சேபகரமானவை என்று கூறி, அவற்றின் மீது லோக சபை விவாதம் நடத்தியது. இந்த விவாதத்தின் விவரங்களைப் பத்திரிகைகளில் படித்த பலர் உள்நாட்டிலிருந்தும் வெளி நாடுகளிலிருந்தும் எனக்குத் தந்தி மூலமும் கடிதங்கள் எழுதியும் என்னுடைய கருத்துக்களை முற்றிலும் ஆதரிப்பதாகத் தெரிவித்திருக்கின்றனர்.

எனினும் சில நண்பர்கள் பார்லிமெண்ட் விவாதத்தின்போது நான் கடுமையாகத் தாக்கப்பட்டதனால், நான் முன்பு கூறிய கருத்துக்களினின்று பின்வாங்கிக் கொண்டு விட்டேனோ என்ற சந்தேகமும் கொண்டிருக்கின்றனர். நான் பிரதமரிடமும், சபாநாயகரிடமும், உள்துறை அமைச்சரிடமும் சென்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருக்கத் தேவையில்லை என்றும் சிலர் எண்ணுவதாக எனக்குத் தெரிகிறது. இவை எல்லாமே தவறான எண்ணங்கள்.

இம்மாதிரி தவறான அபிப்பிராயங்கள் ஏற்படுவதற்குப் பத்திரிகைகளில் பிரசுரமாகும் அரைகுறைச் செய்திகளே காரணமாதலால், அவற்றை நீக்குவதற்காகவே நான் இதை எழுதுகிறேன். நான் என் கருத்தை மாற்றிக் கொண்டு விட்டேனா? இல்லை. தான்பாத் நகரில் நான் கூறிய எந்தக் கருத்தையும் சிறிதளவும் மாற்றிக் கொள்ளவில்லை. அங்கே நான் சொன்ன கருத்துக்களை — பத்திரிகைகளில் நான் சொன்னதாக வெளியான கருத்துக்களை அல்ல — மீண்டும் ஊர்ஜிதம் செய்கிறேன். ராஷ்டிரபதியின் ஆணைக்குட்பட்ட ராணுவ ஆட்சி, தற்போதுள்ள அரசியல் சாஸனத்தை ரத்து செய்வது, ஏராளமான அரசியல் கட்சிகள் முளைத்திருப்பது, மொழிவாரி ராஜ்ய அமைப்பு, வயது வந்தோருக்கு வாக்குரிமை — இப்படிப்பட்ட விஷயங்கள் பற்றி நான் பல ஆண்டுகளாகச் சொல்லி வந்துள்ள கருத்துக்களையேதான் இப்போதும் சொல்லுகிறேன்.

## மன்னிப்புக் கேட்டேனா?

இல்லை. பிரதமர் இந்திரா காந்தியை நான் சந்திக்கச் சென்றது, மாஜி ராணுவத்தினரின் சில பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்கே. இதைப்பற்றிய பேச்சு வார்த்தைகள் முடிந்ததும் நான் தான்பாத் நகரில் பேசியதன் முழு வாசகத்தையும் அவருக்குக் காண்பித்தேன். இதிலிருந்து சில பகுதிகளை மட்டுமே ஒரு சாரார் தனித்து எடுத்துத் தவறான முறையில் வியாக்கியானம் செய்து பரபரப்பூட்டும் விவாதம் நடத்தியுள்ளனர் என்பதையும் எடுத்துச் சொன்னேன்.

நான் சபாநாயகரை அவருடைய வீட்டில் சந்தித்ததும் என் முழுப் பேச்சையும் பி.டி.ஐ. செய்தி ஸ்தாபனம் குறித்துக் கொண்டிருந்தபடி அவருக்குக் காண்பிக்கவே. இதை அவர் தெரிந்து கொண்டால் பார்லிமெண்டில் இது பற்றி நடைபெறும் விவாதத்தைச் சுருக்கவும் சட்டசபையின் பொன்னான காலம் அவசியமில்லாத விஷயங்களில் வீணாவதைத் தவிர்க்கவும் உதவியாக இருக்கும் என்று எண்ணினேன்.

அவசியமான முக்கிய விஷயங்கள் அநேகம் கவனிக்கப்படாமல் கிடக்கின்றன. உதாரணமாக அரசியல் காரணங்களுக்காக நிரபராதிகளான மக்கள் பலர் கொல்லப்படுவது, அரசாங்க உடைமைகளையும் தனிப்பட்டோர் உடைமைகளையும் நாசம் செய்வது, சட்டம், ஒழுங்கு முதலியவற்றை அடியோடுமதிக்காமல் இருப்பது, தொழிற்சாலைகளில் திடீர் வேலை நிறுத்தங்கள் செய்து உற்பத்தி குறைவது,



மாணவர்களிடையே அமைதியின்மை நிலவுவது. கல்வித் தரம் குறைவது மற்றும் இவை போன்ற முக்கிய பிரச்னைகளில் போதிய கவனம் செலுத்தப்படவில்லை.

நான் காண்பித்த பிரஸ் டிரஸ்ட் அறிக்கையைப் பார்த்துவிட்டுச் சபாநாயகர், உள்துறை அமைச்சருக்கும் அதைக் காட்டும்படி என்னைக் கேட்டுக் கொண்டார். லோக சபையில் கேட்கப்படும் கேள்விகளுக்கு உடனுக்குடனே பதில் சொல்ல அவருக்கு அது உதவியாக இருக்கும் என்றும் சபாநாயகர் ஆலோசனை கூறினார்.

இதன்படி நான் உள்துறை அமைச்சரைப் பாராளுமன்றத்திலேயே அவருடைய அலுவலகத்தில் கண்டு, மார்ச் மாதம் 10ந் தேதி காலை பத்திரிகைகளில் வெளியான செய்திகள் தவறானவை, அரைகுறையானவை என்று எடுத்துச் சொன்னேன். இதைப் பற்றி நான் எந்த வித சந்தேகத்துக்கும் இடம் வைக்கவில்லை. அரைகுறைப் பத்திரிகை வாசகங்களைப் படித்துவிட்டு ஆலோசியாமல் அவர் விடுத்த பதில் அறிக்கை என் மனத்தைப் புண்படுத்தியது என்பதையும், என்னைப் பற்றிக் குறைவாகவும், கண்ணியமற்ற வகையிலும் அவருடைய அறிக்கையில் வாசகங்கள் உபயோகப்படுத்தப்பட்டிருந்தன என்பதையும் தெளிவுபடுத்தினேன். அவர் கூறியவற்றைப் படித்து நான் மனச் சோர்வு அடையவில்லை என்பதையும் அவருக்குச் சொன்னேன். ஏனெனில் அவர் அரசியல் காரணங்களுக்காக அவ்விதம் லோக சபையில் பேச நேர்ந்திருக்கலாம். அதே அரசியல் காரணங்களுக்காகவேதானோ என்னவோ, நான் என் பேச்சின் முழு நகலைக் காண்பித்து விஷயங்களை விளக்கிய பிறகும் அவர் பார்லிமெண்ட் விவாதத்தின்போது மீண்டும் என்னை அநாவசியமாகத் தாக்கிக் கடுமையாகப் பேசினார்.

மேலே சொன்ன மூன்று பெரியார்களையும் மன்னிப்புக் கேட்பதற்காக நான் சந்திக்கவில்லை. நான் மன்னிப்புக் கோருவதற்கு ஒன்றுமே இல்லை. இதைத் தெளிவாகச் சொல்கிறேன்.

**நா**ன் பத்திரிகை மூலம் மார்ச் 13ந் தேதி விடுத்த அறிக்கையைப் படித்தபின் ராஷ்டிரபதியின் ஆணைக்குட்பட்ட ராணுவ ஆட்சி நமக்கு வேண்டும் என்ற என்னுடைய கருத்தை நான் மாற்றிக்கொண்டு விட்டதாகப் பல நண்பர்கள் கருதுகிறார்கள். இவ்வாறு நினைப்பது சரியல்ல. இது விஷயத்தில் பத்திரிகைகள் எனது கருத்துக்களைச் சரியாக வெளியிடவில்லை.

நமது நாட்டில் ஒழுங்கீனம் மிகுந்திருத்தலாலும், சட்டத்தையும் அமைதியையும் மதிப்பாரின்மையாலும் ஜனநாயகம் பிழைப்பது அரிது என்பதைப் பார்க்கும்போது, சுமார் ஐந்து வருஷ காலத்துக்கு ராஷ்டிரபதி ஆட்சி நடப்பது நல்லது என்று நான் வெகு நாட்களாகச் சொல்லி வருகிறேன். இப்போதுள்ள அரசியல் சாஸனத்தின்படி இம்மாதிரியான ராஷ்டிரபதி ஆட்சி ஏற்பட முடியாது. அதனால் இப்போதுள்ள அரசியல் சாஸனத்தை ரத்து செய்துவிட்டு, இடைக்கால அரசியல் சாஸனத்தை ஏற்படுத்திக் கொண்டு, ராஷ்டிரபதி ஆட்சி நடைபெறுவதற்கு வகை செய்ய வேண்டும்.

நமக்கு ஆலோசகர்களாக நாட்டு மக்களிலிருந்து திறமைசாலிகளான சுமார் இருபத்தைந்து நபர்களை ராஷ்டிரபதி தம் இஷ்டப்படி நியமித்துக் கொள்ள வேண்டும். நாட்டில் நூற்றுக் கணக்கான அறிஞர்கள், திறமைசாலிகள் இருக்கின்றனர். பலாத்காரத்திலும் நாச வேலைகளிலும், கொலைகளிலும், அட்டூழியங்களிலும் ஈடுபட்டு அமைதியை விரும்பும் மக்களிடம் பீதியைப் பரப்புவோர் சில ராஜ்யங்களில் மிகுதியாக உள்ளனர். அந்த ராஜ்யங்களை ராணுவத்தினிடம் ஒப்படைத்து நிர்வாகம் நடைபெறச் செய்ய வேண்டும். ஆனால் ராணுவம் ராஷ்டிரபதியின் அதிகாரத்துக்குட்பட்டே பணியாற்றும்.

ராணுவம் தன் போக்கில் அரசாட்சியைக் கைப்பற்றிக் கொள்ளும் முறையை நான் எப்போதும் விரும்பியதில்லை.

அத்தகைய ராணுவ ஆட்சி இந்தியாவில் ஒருபோதும் ஏற்படாது; ஏற்படவும் முடியாது. இது என் முடிவான எண்ணம். இதற்குக் காரணங்கள் உண்டு. நமது நாடு பெரிய நாடு. விஸ்தாரமான நாடு. நமது ராணுவத்தின் பிரிவுகளான தரைப் படை, கப்பற் படை, விமானப் படை ஒவ்வொன்றும் தனித் தனி தளபதிகளின் தலைமையில் இயங்கி வருகிறது. ஒவ்வொரு படையிலும் பல்வேறு ஜாதியினரும் இணைந்திருப்பதால் மூன்று படையினருக்குள்ளே அரசைக் கைப்பற்றும் விஷயத்தில் ஒரே முகமான மனப்பான்மையும், செயலாற்றும் தன்மையும் ஏற்படக்கூடிய சூழ்நிலை இல்லை.

ஆனால் மக்கள் தாற்காலிகமாக ராணுவ ஆட்சி வேண்டும் எனத் தீவிரமாக விரும்பிக் கோரினால் அந்த வேண்டுகோளை நான் ஆதரிக்கிறேன். நாட்டின் சீர்கேடான நிலைமையைச் சீராக்குவதற்காக மேற்கொள்ளப்படும் ஒரு தாற்காலிக நடவடிக்கையே இது. ராணுவ ஆட்சி இரண்டு விதமான சூழ்நிலைகளில் மட்டுமே ஏற்படக் கூடும். நமது அண்டை நாடு ஒன்றில் நடந்தது போல் அரசியல்வாதிகள் தாங்களாகவே ஆட்சிப் பொறுப்பை ராணுவத்தினிடம் ஒப்படைக்கலாம். அல்லது மக்களே ராணுவ ஆட்சி வேண்டும் என்று கோரிக்கை விடுக்கலாம். இந்த விஷயம் பற்றி என்னுடைய முழுக் கருத்தையும் விரிவாக 1969 ஜூலை 28, 29 தேதிகளில் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' தினசரியில் வெளியான "இந்தியாவும் ஜனநாயகமும்" என்ற கட்டுரையிலும் அதே ஆண்டில் நான் எழுதிய மற்றொரு கட்டுரையான "நமது தாய் நாடு" என்பதிலும் விளக்கியிருக்கிறேன்.

சில நாட்களுக்கு முன் சண்டிகர் நகரில் நம்முடைய மாஜி அமைச்சர் ஒருவர் நாட்டின் நிலைமை பற்றிப் பேசியது இந்தச் சந்தர்ப்பத்தில் என் நினைவுக்கு வருகிறது.

"நாட்டின் சில பகுதிகளில் நிலவும் அராஜகத்தையும் 'ஃபாஸிஸ்டு' மனோபாவங்களையும் பார்க்கும்போது கொஞ்ச காலத்துக்காவது நாட்டில் ராணுவ ஆட்சி ஏற்படுவதுதான் தகுந்த பரிகாரமாகும்" என்று அவர் சொன்னதாகப் பத்திரிகைகள் கூறின. தவிரவும், "இது சம்பந்தமாகத் தளபதி கரியப்பா சரி

யான சமயத்தில் எச்சரிக்கை செய்திருக்கிறார்'' என்ற ரீதியிலும் அவர் பேசியிருக்கிறார்.

## அரசியல் கட்சிகள்

நமது நாட்டில் தேவைக்கு அதிகமான அளவில் ஏராளமான அரசியல் கட்சிகள் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. இவை மக்களின் சக்தியையும் பணத்தையும் விரயமாக்கவே பயன்படுகின்றன. மக்கள் நலனுக்கும் அவர்களின் பாதுகாப்புக்கும் நாட்டின் பாதுகாப்புக்கும் செலவழிக்கப்பட வேண்டிய காலம் கட்சிகளின் பல்வேறு கொள்கை மோதல்களில் விரயமாக்கப்படுகிறது. என் அபிப்பிராயத்தில் மூன்று கட்சிகள் இருந்தாலே போதும். மற்ற கட்சிகளைக் கலைத்து விட வேண்டும். பிரிட்டனில் உள்ளது போன்று கன்சர்வேடிவ் கட்சி, லிபரல் கட்சி, லேபர் கட்சி என்று ஏறக்குறைய அதே போன்ற கொள்கைகளுடன் கூடிய கட்சிகள் அமையலாம். அவற்றுக்கு என்ன பெயர் வேண்டுமானாலும் சூட்டிக் கொள்ளுங்கள். எனக்கு ஆட்சேபமில்லை.

நாட்டில் சட்டமும் ஒழுங்கும் அமைதியும் நிலைநாட்டப்பட்ட பின் மக்கள் அமைதியான வாழ்க்கை நடத்துகின்றனர் என்று ஏற்பட்டவுடன் ஒரு பொதுத் தேர்தல் நடைபெறவேண்டும். மக்களின் வோட்டுக்களைப் பெற மேலே சொன்ன மூன்று கட்சிகள் மட்டுமே இருக்கும். தேர்தலில் எந்தக் கட்சி மிக அதிக வாக்குகள் பெற்று வெற்றி பெறுகிறதோ, அதுவே ஆளும் கட்சியாக அங்கீகரிக்கப்படும். இரண்டாவதாக அதிக வாக்குகள் பெறும் கட்சி எதிர்க் கட்சியாகப் பணியாற்றும். மூன்றாவது கட்சி இவ்விரு கட்சிகளுக்குமிடையே சமநிலையை ஏற்படுத்திக் கொண்டிருக்கும். இதன் பின்னர் ஒரு புதிய அரசியல் சாஸனமே உருவாக்கப்பட வேண்டும். அதற்குப் பிறகு ராஷ்டிரபதியின் ஆணைக்குட்பட்ட ராணுவ ஆட்சி முடிவு பெறும். ஜனநாயகம் அதனுடைய தூய வடிவில் மறுபடியும் அரசியல் உலகத்தில் நுழையும்.

## வோட்டுரிமை

வயது வந்தோருக்கு வோட்டுரிமை பற்றிச் சில காலமாகவே என்னுடைய கருத்துக்களைக் கூறி வந்திருக்கிறேன். இன்றைய நிலைமையில் வோட்டர்களில் பெரும்பான்மையினர் கல்வி அறிவில்லாதவர்கள். நேர்மையற்ற சில அரசியல்வாதிகளின் லஞ்ச ஊழல் போன்ற நடவடிக்கைகளுக்கு இவர்கள் எளிதில் வசப்பட்டு விடுகிறார்கள். அதனால் நாட்டைத் திறமையுடனும் விவேகத்துடனும் நடத்தத்தக்க நேர்மையாளர்கள் தேர்ந்தெடுக்கப் படுவதில்லை. நேர்மையானவர்களும் திறமையானவர்களும் தேர்தலில் நிற்க அதிக அளவில் முன்வருவதுமில்லை.

திறமை மிக்க அறிஞர்கள் தேர்தலில் நின்று வெற்றிபெறவேண்டுமென்றால் வோட்டுரிமை வழங்குவதில் சில அருகதைகளைக் கவனித்தல் அவசியம். சொத்தின் அடிப்படையில் இத்தகுதியை நிர்ணயிக்கலாகாது. கல்வி அறிவின் அடிப்படையிலேயே இது அமைந்திருக்க வேண்டும். இவ்விதம் இருப்பின் இரண்டு அநுகூலங்கள் நாட்டுக்கு ஏற்படும். ஒன்று, யாருக்கு வாக்களிக்கிறோம் என்பதை வாக்காளர்கள் உணர்வார்கள். லஞ்ச ஊழலுக்கு இடமிருக்காது. இரண்டாவது — இது மிகவும் முக்கியமானது. — நாட்டில் கல்வி அறிவு மிக வேகமாக வளர வகை ஏற்படும். கல்வி இல்லாததால் வாக்குரிமையை இழந்துவிட்டோம் என்ற உணர்ச்சி வேகத்தில் எல்லாரும் கல்வி யறிவுள்ளவர்களாக ஆக முயலுவார்கள். சில ஆண்டுகளுக்குள்ளேயே படித்தவர்களின் எண்ணிக்கை கணிசமாக உயரும்.

## மொழிவாரி ராஜ்யங்கள்

நாட்டின் ஒற்றுமைக்கு மொழிவாரி ராஜ்ய அமைப்பு சாவுமணி அடித்துவிட்டது. இதன் விளைவாகவே தோன்றின பெல்காம், காஸர்கோட், தெலிங்கானா, சண்டிகர் போன்ற பிரச்னைகள். சில ராஜ்யங்களில் தனிப்பட்ட 'சேனை'கள் தோன்றியுள்ளன. எல்லைத் தகராறுகள், நதி நீர்ப் பங்கீடு பிரச்னை போன்ற பல சச்சரவுகள் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன. ஏதோ அந்நியருடன் சண்டை போடுவது போல் நம் நாட்டவரே ஒருவரோடு ஒருவர் சச்சரவு செய்கிறோம்.

நான் நாட்டின் பல பகுதிகளில் சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறேன். சென்றவிடமெல்லாம் நாம் ஒரு நாட்டு மக்கள் அல்ல, தனித் தனி ராஜ்ய மக்கள் என்ற மனப்பான்மையையே காண்கிறேன். இது கொடிய குற்றமாகும். நாம் அனைவரும் ஒரே நாட்டினர்; இந்தியர்கள் — என்ற உணர்ச்சியிருந்தாலொழிய நாம் வேகமாக, திறமையாக முன்னேற முடியாது.

நாட்டுக்கு ஒருமைப்பட்ட அரசாட்சிதான் வேண்டும் என்று நான் விரும்புகிறேன். நாட்டில் மொழிவாரி ராஜ்யம் நீடிக்கும்வரை ஒற்றுமையான, பலம் மிக்க தேசமாக, இந்தியா விளங்கும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. இதனால் நம்முடைய முன்னேற்றம் தடைப்படும். முன்னேற்றமடைந்த மற்ற நாடுகளுக்குச் சமமாக நாம் வளர்ச்சியுறவோ வலிமை பெறவோ முடியாது. அதனால்தான் மொழிவாரி ராஜ்ய அமைப்பை ரத்து செய்ய வேண்டும் என்று சொல்லி வருகிறேன்.

ராணுவம் இப்போது எவ்விதம் தலைமை ஸ்தலங்கள், பிராந்திய அமைப்புகள், வட்டங்கள் என்று பிரிக்கப்பட்டிருக்கிறதோ அதே போல நாடும் நிர்வாக, பொருளாதார சௌகரியங்களை அடிப்படையாகக் கொண்டு பல பிராந்தியங்களாகப் பிரிக்கப்பட வேண்டும். ராணுவத்தை நினைவூட்டாத வகையில் ஏதாவது மாற்றுப் பெயர்களை இப்பிராந்தியப் பிரிவுகளுக்கு வைக்கலாம்.

சாதாரண மக்கள்தான் நாட்டில் முக்கியமானவர்கள். இந்தியா அவர்களுக்குத்தான் சொந்தம். ஒரு பொதுஜன அபிப்பிராயத் தேர்வு நடத்தினால் நாட்டில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் ராஷ்டிரபதியின் ஆணைக்குட்பட்ட ராணுவ ஆட்சி, ஜனநாயகத்தைக் காப்பதற்காகத் தாற்காலிகமாக, வேண்டும் என்றே வாக்களிப்பார்கள் என்று நான் நம்புகிறேன்.







Parle Gluco
Parle Gluco

வைகாசி அநுஷம் பரம புனிதமான தினம்: ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பரமாசாரியாள் இப்புவியில் அவதரித்த தினம் அது. இந்த வைகாசி அநுஷ நன்னாளில் ஸ்ரீ ஜகத்குருவின் எழுபத்தேழாம் ஜயந்தியன்று அக்கருணை முனிவரை வணங்கி லோக க்ஷேமத்தைப் பிரார்த்திக்கிறோம். ★



# ஆண்டவனின் அருள் தூதர்

— பால் பிரண்டன்

பால் பிரண்டன் என்ற ஆங்கில எழுத்தாளர் யோகப் பயிற்சி பெறும் இலட்சியத்துடன் நாற்பதாண்டுகளுக்கு முன் (1931ல்) இந்தியாவுக்கு வந்திருந்தார். வட இந்தியாவில் யாத்திரை செய்து தகுந்த ஆசாரியர் கிடைக்காமல், தென்னகம் வந்தார்.

புகழ் பெற்ற ஆங்கில எழுத்தாளரான ஸ்ரீ கே. எஸ். வேங்கடரமணி அவர்களை பிரண்டன் சந்தித்தார். அவரை ஸ்ரீ வேங்கடரமணி அவர்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளிடம் அழைத்துச் சென்றார்.

நாற்பதாண்டுகளுக்கு முன் செங்கல்பட்டில் நிகழ்ந்த அச்சந்திப்பு பற்றிப் பால் பிரண்டனின் வார்த்தைகளையே கேட்போம்:*

* * *

குறுகலான ஒரு கதவைத் தாண்டிச் செல்கிறோம். வெறிச்சென்றிருக்கும் ஓர் உள்ளறையை அடைகிறோம். மறு கோடியில் மங்கலான விளக்கேற்றப்பட்ட ஒரு பகுதி. அங்கு நிழலில் ஒரு சிறிய உருவம் நிற்பதைக் காண்கிறேன். அவர்தான் ஸ்ரீ சங்கரர். அவரை நெருங்குகிறேன். என்னுடைய சிறிய கையுறையை வைத்துவிட்டு, வணங்கிக் கும்பிடுகிறேன்.

அவரை நான் மௌனத்தில் பார்க்கிறேன். தோற்றத்தில் சிறிய அம்மனிதர் சந்நியாசிக்குரிய காஷாயம் அணிந்து, துறவிக்கான தண்டத்தின் மீது சாய்ந்திருக்கிறார். அவருக்கு இன்னும் நாற்பது வயதாகவில்லை என்று தெரிந்து கொண்டிருந்தேன். எனவே அவரது கேசத்தில் நரை கண்டிருப்பது ஆச்சரியமாயிருக்கிறது.

அவரது உத்தமமான முகம்! நரையும் பழுப்பும் சித்திரிக்கும் முகம்! என்னுடைய நினைவகத்தில் அந்த முகம் வணக்கத்துக்குரிய இடத்தைப் பெற்றுள்ளது. ஆன்மிகப் பாங்கு அம்முகத்தில் இலகுகிறது. அவர் காட்டும் பாவம் உள்ளடங்கியிருக்கிறது; மென்மையாக இருக்கிறது. அவரது விரிந்த கரு நயனங்களிலோ அசாதாரணமான அமைதியும் அழகும் நிறைந்துள்ளன. சிறிய நாசி — கோணல் மாணல் இல்லை — கம்பீரமான கச்சிதமான அமைப்பு. அவரது மோவாயில் குறுந்தாடி. இம்முகத்தில் அறிவுத் திறன் என்ற சிறப்பும் கூடியிருக்கிறது.

இந்திய நாட்டில் நான் அடைந்த அநுபவங்களைப் பற்றி அவர் கேட்கிறார். அந்நியர் ஒருவர் மீது இந்திய மக்களும், அமைப்புகளும் என்ன கருத்துக்களை உண்டாக்குகின்றன என்பதை உள்ளபடி தெரிந்து கொள்வதில் அவர் மிகவும் அக்கறை காட்டுகிறார். நான் என் அபிப்பிராயங்களை வெளிப்படையாகக் கூறுகிறேன்.

அதன் பிறகு மேலும் விசாலமான துறைகளில் சம்பாஷணை செல்கிறது. அவர் தவறாமல் ஆங்கில தினசரிகளைப் படிக்கிறார், வெளி உலகின் நிகழ்கால நடப்புக்களில் நல்ல விஷய ஞானம் பெற்றிருக்கிறார் என்று கண்டு மிகவும் ஆச்சரியம் அடைகிறேன்.

ஸ்ரீ சங்கரருக்குத் தீர்க்கதரிசனம் பொதிந்த உட்பார்வை உண்டு என்பதில் வேங்கடரமணிக்கு உள்ள அழுத்தமான நம்பிக்கையை நினைவுகூருகிறேன். எனவே உலகின் எதிர்காலம்பற்றி அவரது கருத்தைக் கேட்கிறேன்.

''உலகு எங்கும் அரசியல் நிலையும் பொருளாதார நிலையும் எப்போது அபிவிருத்தியடையத் தொடங்கும் என்று எண்ணுகிறீர்கள்?'' என்று கேட்கிறேன்.

''உயர்ந்த நிலைக்குத் திருப்பம் காண்பதென்பது விரைவில் நடைபெறாது'' என்று அவர் விடை கூறினார். ''இது சிறிது அவகாசம் தேவைப்படும் காரியக் கிரமமாகும். ஒவ்வோராண்டும் செல்லச் செல்ல உலக நாடுகள் கொலை ஆயுதங்களுக்காக மேன்மேலும் செலவை அதிகமாக்குகின்றன. இந்த நிலையில் முன்னேற்றம் எப்படி ஏற்பட முடியும்?'' என்றார்.

''ஆயினும் இப்போது ஆயுத ஒழிப்பு பற்றி நிறையப் பேசப்படுகிறதே? இதற்குப் பொருள் இருக்கிறதா?''

* A Search in Secret India - chapter VIII

புகைப்படம்: ஆர். கிருஷ்ணன்

"நீங்கள் உங்களுடைய போர்க் கப்பல்களையெல்லாம் குப்பைமேடாக்கி விட்டு, உங்களுடைய பீரங்கிகளையெல்லாம் துருப்பிடிக்க விட்டாலும் கூட இதனால் யுத்தத்தை நிறுத்திவிட முடியாது. தடியை வைத்துக் கொண்டாகிலும் மக்கள் தொடர்ந்து சண்டை போட்டுக் கொள்வார்கள்."

"அப்படியானால் நிலைமை திருந்த என்ன செய்யலாம்?"

"ஒரு நாடும் மற்றொரு நாடும் ஒன்றையொன்று ஆன்மிகமாகப் புரிந்து கொண்டால்தான் — பணக்காரர்களும் ஏழைகளும் ஒருவரையொருவர் இவ்வாறே புரிந்துகொண்டால்தான் — நல்லெண்ணம் உண்டாகும், உண்மையான அமைதி உண்டாகும், சுபிட்சம் உண்டாகும். வேறு வழி இல்லை."

"அது இப்போதைக்கு எட்டாத் தொலைவில் இருப்பதாகவே காண்கிறது. இப்போது நாம் நம்பிக்கை கொள்வதற்கே இல்லையா?"

சுவாமிகள் தமது தண்டத்தின்மீது புறத்தை நன்கு அழுத்திக் கொள்கிறார். "இன்னும் ஆண்டவன் இருக்கிறான்" என்று மிருதுவாகக் கூறுகிறார்.

"அப்படி இருந்தால் அவன் வெகு தூரத்தில் இருக்க வேண்டுமென்றே தோன்றுகிறது." தைரியமாக ஆட்சேபணைக் குரல் எழுப்பினேன்.

"ஆண்டவனுக்கு மனித குலத்திடம் அன்பு தவிர வேறெதுவும் இல்லை" என்று மென்மையாகப் பதில் வருகிறது.

"இன்று உலகைப் பீடித்துள்ள துன்பத்தையும் இழிநிலையையும் அளவாகக் கொண்டு மதிப்பிட்டோமாயின் அவனுக்கு உலகிடம் அசிரத்தை தவிர வேறெதுவும் இல்லை" என்று பொரிந்து தள்ளினேன்.

சங்கரர் என்னை விசித்திரமாகப் பார்க்கிறார். அவசரப்பட்டுப் பேசியதற்காக நான் வருந்துகிறேன்.

சுவாமிகள் சொல்கிறார்: "பொறுமை உள்ள மனிதனின் கண்கள் இன்னும் ஆழமாகப் பார்க்கும். நியமிக்கப்பட்ட காலத்தில் ஆண்டவன் மனிதர்களையே கருவியாகக் கொண்டு நிலைமையைச் சீர்செய்வான். தேசங்களிடை உள்ள கொந்தளிப்பு, மக்களிடை உள்ள அதருமக் குணவிசங்கள், துன்பமுற்ற கோடானுகோடியரின் உபாதை இவையே. இவற்றின் எதிர் விளைவாகத் தெய்விக உந்தல் பெற்ற ஒருவன் தோன்றுவதற்குத் தூண்டுகோலாக அமையும். பௌதிக ஸயன்ஸ் விதிபோல் இந்தக் காரியக் கிரமமும் செயல்புரிகிறது. ஆன்மிக அஞ்ஞானம், உலகாயதம் இவற்றால் ஏற்படும் நிலைமை எவ்வளவுக்கெவ்வளவு இழிவாகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு உயர்ந்த ஒரு மனிதன் தோன்றி உலகை உத்தாரணம் செய்ய உதவுவான்."

"அவ்வாறெனில் நமது காலத்தில் அப்படிப்பட்ட ஒருவன் தோன்றுவான் என எதிர்பார்க்கிறீர்களா?"

"நமது காலத்தில்" என்று நான் சொன்னதைத் திருத்துமுகமாக "நமது நூற்றாண்டில்" என்கிறார் சுவாமிகள். "தோன்றுவான் என்றே நிச்சயம் கொள்ளலாம். உலகின் தேவை மிகப் பெரிதாக உள்ளது. ஆன்மிக இருளும் மிகக் கனமாக இருக்கிறது. எனவே ஆண்டவனால் அனுப்பப்பட்ட ஒருவன் நிச்சயம் தோன்றுவான். மனிதனுக்கு உள்ளே தெய்விகமான ஆன்மா வதிகிறது. முடிவில் அது மனிதனை மீண்டும் ஆண்டவனிடம் சேர்த்தே தீரவேண்டும்."

"ஆனால் மேல்நாட்டு நகரங்களில் வசிக்கும் சில துஷ்டர்களின் செய்கைகளைப் பார்க்கும்போது அவர்களுக்குள்ளே ராக்ஷதர்கள் வசிப்பது போலல்லவா தோன்றுகிறது?" என்று நான் எதிர்த்துக் கேட்கிறேன்.

"மக்களைப் பழிக்காதே. மனிதர்கள் பிறந்து வளரும் சுற்றுச் சூழலைப் பழிக்க வேண்டிய அளவுக்கு மனிதர்களைப் பழிப்பதற்கில்லை. மனிதர்கள் உண்மையில் எப்படி இருக்கிறார்களோ அதை விட மோசமாக அவர்கள் ஆகுமாறு சுற்றுச் சூழலும் சந்தர்ப்பங்களும் அவர்களைப் பலவந்தப்படுத்துகின்றன. இது கீழ் நாடுகள் மேல் நாடுகள் இரண்டுக்கும் உண்மை. சமூகத்தை உயர்ந்த எண்ணங்களில் இசைவிக்க வேண்டும். இலட்சிய நோக்கால் லௌகிக நோக்கை நிரவ வேண்டும். உலகின் கஷ்டங்களுக்கு வேறு வைத்தியமில்லை. இப்போது எல்லா நாடுகளும் கஷ்டத்தில் ஆழ்ந்துள்ளன. இதுவே மாற்றம் ஏற்பட வலிவான உந்தல் தரும் — தோல்வியே பல சந்தர்ப்பங்களில் வெற்றிக்கு வழிகாட்டுவது போல்."

"அதாவது லௌகிக நடவடிக்கைகளிலும் மக்கள் ஆன்மிக நோக்கை அநுசரிக்க வேண்டுமென்று விரும்புகிறீர்கள்?"

"அப்படியேதான். இது காரியசாத்தியமற்றதல்ல. ஏனெனில் இந்த வழிதான் முடிவில் அனைவருக்குமே திருப்தி தரக்கூடிய விளைவுகளை உண்டாக்கும். இவ்விளைவுகள் விரைவில் அழியாமலும் இருக்கும். இவ்வுலகில் ஆன்ம ஒளி கண்ட மனிதர்கள் நிறைய இருந்தால் இந்த மாற்றம் விரைவாகப் பரவும். இந்தியா அதன் ஆன்மிகத் தலைவர்களை ஆதரித்தும் மதித்தும் வருகிறது. இது இத்தேசத்தின் சிறப்பு. இருந்தாலும் முன்னாளில் இருந்த அளவுக்கு இன்று இந்த மனோபாவத்தைப் பார்க்க முடியவில்லை. உலக நாடுகள் யாவும் ஆன்ம திருஷ்டி வாய்ந்தவர்களை வழிகாட்டியாகக் கொண்டால் விரைவிலேயே சாந்தி காணும், சுபிட்சமும் காணும்."

எங்கள் சம்பாஷணை வளர்ந்து செல்கிறது.

பல விஷயங்களைப் பற்றிப் பேசிய பிறகு நான் கேட்கிறேன்: "உயர்ந்த யோகத்தின் உண்மையை நிரூபித்துக் காட்டத் தகுதி வாய்ந்தவர் என்று தாங்கள் கருதும் ஒரு குருநாதனிடம் என்னை அனுப்புவீர்களா?"

நீண்ட நேரம் மௌனம் நிலவுகிறது. பின்பு சுவாமிகள் விடையளிக்கிறார்:

"ஆகட்டும். நீ விரும்புவதை உனக்குத் தரக்கூடிய இரண்டு குருமார்களை நான் அறிகிறேன். ஒருவர் வாரணாசியில் வசிக்கிறார். அவரை நெருங்க வெகு சிலரே அநுமதிக்கப்படுகின்றனர். இதுவரை அவரது ஏகாந்தத்தைக் குலைக்க எந்த ஐரோப்பியரும் அநுமதிக்கப்பட்டதில்லை என்பது நிச்சயம்...."

''மற்றவர்?''

''மற்றவர் இன்னும் தெற்கே போனால் உன் நாட்டில் வசிக்கிறார். அவர் உயர்ந்த குரு என்று அறிவேன். நீ அவரிடமே போகலாம்.''

''யார் அவர்?''

''அவரை மகரிஷி என்பார்கள். அவர் இருக்குமிடம் அருணாசலம். (திருவண்ணாமலை) வடார்க்காட்டில் இருக்கிறது. அவரை நீ கண்டு பிடிப்பதற்கு முழுத் தகவலும் தரட்டுமா?''

''மெத்த நன்றி புனிதரே! அந்த இடத்திலிருந்தே என்னை ஒருவர் அழைத்துச் செல்ல வந்திருக்கிறார்.''

''அப்படியானால் அங்கு போகிறாய்?''

நான் தயங்குகிறேன். ''தென் இந்தியாவிலிருந்து நான் நாளைக்குப் புறப்படுவதற்குச் சகல ஏற்பாடுகளும் ஆகிவிட்டன'' என்று தெளிவில்லாமல் கூறுகிறேன்.

''மகரிஷியைச் சந்திக்காமல் தென் இந்தியாவை விட்டுப் புறப்படுவதில்லை என்று எனக்கு வாக்குத் தா.''

என்னைக் காப்பாற்ற வேண்டும் என்ற அந்தரங்க பூர்வமான விருப்பம் அவர் கண்களில் நிறைந்திருக்கிறது. வாக்குத் தருகிறேன்.

அவரது முகத்தில் ஓர் அருட் புன்னகை பரவி ஓடுகிறது.

''விசாரப்படாதே. நீ தேடுவதைக் கண்டு கொள்வாய்'' என்கிறார்.

வெளியே தெருவிலுள்ள கூட்டத்திலிருந்து முணுமுணுப்பு வீட்டுக்குள் நுழைகிறது.

''உங்களுடைய பெருமதிப்புள்ள பொழுதில் ஏராளமாக எடுத்துக் கொண்டுவிட்டேன்'' என்று மன்னிப்புக் கோரி, விடைபெறுகிறேன்.

புனிதர் ஒரு பிரிவுச் செய்தி வழங்குகிறார்:

''என்னை நீ எப்போதும் நினைவு வைத்துக் கொள்வாய். நானும் உன்னை எப்போதும் நினைவு வைத்துக் கொள்வேன்.''

ரத்தினச் சுருக்கமான, புதிர் மயமான அந்த வார்த்தைகளைக் கேட்டபடியே நான் மனமில்லாமல் அந்த சுவாரஸ்யமான வியக்தியிடமிருந்து விலகுகிறேன்.

* * *

சென்னை இருக்கைக்குத் திரும்பும்போது ஏறக்குறைய நடு நிசியாகிவிட்டது. தலைக்கு மேல் கடைசியாக ஒரு முறை பார்க்கிறேன். ஆகாயம் என்கிற வட்ட விமானத்தில் எண்ணற்கரிய கூட்டங்களாக நட்சத்திரங்களை இழைத்திருக்கிறது. இவ்வளவு நட்சத்திரங்களை ஐரோப்பாவில் எங்குமே பார்க்க முடியாது.

டார்ச் விளக்கை அடித்தவாறே படியேறி வராந்தாவை அடைகிறேன். தரையோடு ஒட்டிக் கிடந்த ஓர் உருவம் இருளில் எழுந்து எனக்கு முகமன் கூறுகிறது.

அவரிடம் ஒரு கேள்வியைத் துப்பாக்கி ரவை போல் எறிகிறேன். ''உங்கள் குருவை மகரிஷி என்பார்களா?''

ஆச்சரியத்தில் அவருக்குத் தூக்கிவாரிப் போடுகிறது. ''உமக்கு எப்படி ஐயா தெரிந்தது?'' என்கிறார்.

''அதைப் பற்றிக் கவலை வேண்டாம். நாளைக்கு நாம் இருவரும் அவருடைய இடத்துக்குச் செல்கிறோம். நான் பிரயாணத் திட்டத்தை மாற்றிக் கொள்கிறேன்'' என்றேன்.

அடுத்த அரை மணி அவரைப் பல கேள்விகளால் துளைத்துவிட்டு, முற்றிலும் அயர்ந்து போய், படுக்கையில் விழுந்தேன்...

அடுத்தபடியாக எனக்கு நினைவிருப்பது, நான் சரேலென்று விழித்துக் கொண்டதுதான். அறையில் இருள் அப்பிக் கிடக்கிறது. என் நரம்புகளில் விசித்திரமான விரைப்பு ஏற்பட்டிருப்பதாக உணர்கிறேன். சுற்றிலுமுள்ள சூழலில் மின்சாரம் பாய்ச்சியதுபோல் இருக்கிறது. தலையணையின் கீழிருந்து கடிகாரத்தை இழுத்துப் பார்க்கிறேன். அதன் ரேடியம் ஒளி டயல் மணி இரண்டே முக்கால் என்று அறிவிக்கிறது.

படுக்கையின் கால்மாட்டில் ஏதோ ஒரு பிரகாசமான பொருள் இருப்பதாக இப்போது உணர்வு ஏற்படுகிறது. எழுந்திருந்து உட்கார்கிறேன். அந்தப் பொருளை நேராகப் பார்க்கிறேன்.

என் பிரமித்த பார்வை புனித ஸ்ரீ சங்கரரின் முகத்தையும் உருவத்தையும் காண்கிறது. அது தெளிவாகக் கண்ணுக்குப் புலனாகிறது. சந்தேகமே இல்லை. ஸ்ரீ சங்கரர் ஏதோ ஆவி வடிவம் போல் தோன்றவில்லை. ஸ்தூலமான மனித வடிவினராகவே தெரிகிறார். அவரது உருவத்தைச் சுற்றி அற்புதமான பிரகாசம் சூழ்ந்துள்ளது. அறையின் இருளிலிருந்து அவ்வொளியே சங்கரரின் உருவத்தைப் பிரித்துக் காட்டுகிறது.

இந்தக் காட்சி நடக்க முடியாத ஒன்று அல்லவா? அவரைத்தான் நான் செங்கல்பட்டிலேயே விட்டு வந்து விட்டேனே!

விஷயத்தைப் பரிசோதனை செய்கிற முயற்சியில் கண்களை இறுக மூடிக் கொள்கிறேன். மாறுதல் ஏதுமில்லை. தெள்ளத் தெளிய அவரை இன்னமும் காண்கிறேன்.

அருள் மயமான, தோழமை நிறைந்த ஒரு சாந்நித்தியம் கிடைக்கப் பெறுகிறேன். என் கண்களைத் திறந்து, அந்தத் தயா மூர்த்தியைப் பார்க்கிறேன்.

அம்முகபாவம் மாறுகிறது. உதடுகள் முறுவல் புரிகின்றன. ''எளிமையாக இரு. அப்படியிருந்தால் நீ தேடுவதைப் பெறுவாய்'' என்று அந்த உதடுகள் சொல்வதாகத் தெரிகிறது.

உருவெளித் தோற்றம் மறைகிறது. எவ்வளவு விந்தையாக வந்ததோ, அவ்வளவு விந்தையாகவே மறைகிறது. என்னை உணர்விலே உயர்த்திவிட்டு, ஆனந்தத்திலே ஆழ்த்திவிட்டு அது மறைகிறது. நடைமுறைக்கு அதீதமான அதன் இயல்பினால் நான் எவ்வித கலக்கமும் அடையவில்லை.

அதன் பின் அன்றிரவு எனக்குத் தூக்கமில்லை. தென்னிந்தியாவின் எளிய மக்களுக்கு ஆண்டவன் அனுப்பி வைத்துள்ள அருள் தூதர் பரம்பரையில் வந்துள்ள புனித ஸ்ரீ சங்கரருடன் அன்று எனக்குக் கிடைத்த மறக்கவொண்ணாத சந்திப்பைச் சிந்தித்தவாறு விழித்துக் கொண்டே படுத்திருக்கிறேன்.

அவரது சுந்தரமான, மிருதுவான உருவம் வாழ்நாள் முழுதும் என் நினைவில் நிச்சயம் கமழ்ந்து கொண்டே இருக்கும்.



# ராமாயணம் ராஜாஜி

“ஆசிரமத்தில் சீதையைக் காணாவிடில் லக்ஷ்மணா! நான் இறப்பேன், நிச்சயம். நீதான் திரும்ப அயோத்திக்குப் போய் விஷயத்தைச் சொல்வாய் ஐயோ! கௌசல்யை துக்கத்தை எப்படிப் பொறுப்பாள்? கைகேயி விரும்பியதைப் பூர்த்தி செய்து விட்டாயே லக்ஷ்மணா! ராக்ஷசர்களுக்கு நம் பேரில் இருந்து வந்த பகையைப் பேதை சீதையின் மேல் காட்டி இதற்குள் அவளைக் கொன்று தின்றே யிருப்பார்கள்! அவளைத் தனியாய் எப்படி நீ விட்டு விட்டு வந்தாய்? மாரீசன் போட்ட சத்தத்தைக் கேட்டு ஏமாந்து போனீர்களே! நான் இப்போது என்ன செய்வேன்? சீதையை நான் காணப் போவதில்லை. அரக்கனுடைய சதி வெற்றியடைந்துவிட்டது. நான் சாவது நிச்சயம். உன்னை நம்பிச் சீதையைப் பார்த்துக் கொள் என்று அவளை உன்னிடம் ஒப்புவித்து வந்தேன். நீ ஏன் அவளை விட்டு விட்டு வந்து விட்டாய்? இப்படிச் செய்யலாமா?'' என்று பசியாலும் தாகத்தாலும் துக்கத்தாலும் கோபத்தாலும் வாட்டப்பட்ட ராமன் பலவாறு கதறினான். கோபம் மேலிட்ட அண்ணனைப் பார்த்து லக்ஷ்மணன் கண்களில் நீர் பெருகப் பேசலானான்:

''அண்ணா! நான் என்ன செய்வேன்? 'ஹா சீதா! ஹா லக்ஷ்மணா!' என்ற கூக்குரலைக் கேட்டதும் சீதைக்குப் பெரும் பயம் பிடித்துக் கொண்டு விட்டது! அவள் துடிதுடித்து நடுங்கி, 'போ! போ! ஓடு! ஓடு! ஏன் நிற்கிறாய்?' என்று என்னை விடாமல் தொந்தரவு செய்து நான் என்ன சொல்லியும் கேட்காமல் என்னைத் துரத்தினாள். 'சீதையே! பயப்பட வேண்டாம். ராமனை இந்த உலகத்தில் எந்த ராக்ஷசனும், எந்தப் பகைவனும் எதிர்த்து வெற்றி பெற முடியாது. இது ராமன் குரல் அல்ல. இது மோசம். மூன்று உலகத்திலும் ராமனைக் கொல்லும் ஆற்றல் படைத்தவர்கள் யாரும் இல்லை. யுத்தத்தில் அவன் இம்மாதிரி தீன சுவரத்துடன் ஒரு நாளும் மானத்தை விட்டுக் கதற மாட்டான். இதை ஒரு கணமும் நம்ப வேண்டாம்' என்று நான் எவ்வளவு சொல்லியும் கேளாமல், 'ஓ பகைவனே! வேஷம் போட்டு எங்கள் கூட வந்து மோசம் செய்தாயே! ராமன் இறந்ததும் என்னை அடையலாம் என்றல்லவா காட்டுக்கு எங்களுடன் நீ வந்தாய்! நீ ஒருநாளும் என்னை அடைய மாட்டாய், மோசக்காரனே! மகா பாபி! பரதனும் நீயும் செய்த சதியா இது?' என்று சொல்லிப் பொறுக்க முடியாத தோஷத்தை என் மேல் சாட்டி, 'நீ போனால் ஆயிற்று. இல்லாவிட்டால் உயிரை இப்போதே விடுவேன்' என்று கதறினாள். உன்மத்தமடைந்தவளாகித் தாங்க முடியாத பேச்சுக்களைப் பேசி என்னைத் துன்புறுத்தித் துரத்தியபடியால் வேறு வழியில்லாமல் வந்தேன், அண்ணா!'' என்றான்.

"நீ சொல்லும் சமாதானத்தை நான் ஒப்புக் கொள்ள முடியாது" என்றான் ராமன். "அவள் என்ன சொன்ன போதிலும் அஞ்ஞானத்தால் உண்டான பேச்சு என்று நீ பொறுத்துக் கொண்டு இருந்திருக்க வேண்டுமல்லவா? அவளைத் தனியாக விட்டு நீ எப்படி வரலாம்? பெண்ணாய்ப் பிறந்தவள் பயத்தினால் ஏதேதோ சொல்லுவாள். அதை நீ பொருட்படுத்தியிருக்கக் கூடாது. நீ செய்தது பெருந் தவறு. சீதையை நான் மறுபடியும் காணப் போவதில்லை" என்று சொல்லி லக்ஷ்மணன் மேல் கோபித்துக் கொண்டு துக்கத்தில் மூழ்கினான்.

இருவரும் வெகு வேகமாக ஆசிரமத்தை நோக்கிச் சென்றார்கள்.

போகும்போது பல அசபக் குறிகள் தோன்றின. அவை ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றிய போதெல்லாம், ராமன், "சீதையின்



க்ஷேமம் சந்தேகம், சந்தேகம்'' என்று லக்ஷ்மணனுக்குச் சொல்லிக் கொண்டே சென்றான்.

ஆசிரமத்தை அடைந்ததும், அது சீதையின்றிச் சூனியமாகக் கிடப்பதைக் கண்டார்கள். ராமனுடைய இதயம் உடைந்து போயிற்று.

மான் தோலும், தர்ப்பையும், புல் பாயும் யாவும் சிதறிக் கிடந்தன. குடிசை பாழாய்க் கிடப்பதைப் பார்த்து ராமன் விம்மி விம்மி அழுதான். இங்கு மங்கும் குடிசையைச் சேர்ந்த வனத்தில் ஓடியோடித் தேடிப் பார்த்தான். மரங்களிலெல்லாம் இலைகளும் புஷ்பங் களும் வாடியிருந்தன. சீதையை எங் கும்காணவில்லை.

''ஐயோ! கொன்று தின்று விட் டார்களோ! எங்கே தூக்கிக் கொண்டு போனார்களோ! எவ்வளவு பயந்து போயிருப்பாள்? சகிக்க முடியவில்லையே! ஒரு வேளை ஆற்றுக்குப் போயிருக் கிறாளோ? ஜலம்கொண்டுவரப் போயிருக் கிறாளோ? பார்ப்போம்!'' என்று பைத்தியம் பிடித்தவனைப் போல் கண்கள் சிவந்து இங்குமங்கும் அலைந் தான். ஒளிந்து கொண்டு வேடிக்கை செய்கிறாளோ என்று மரம் மரமாகத் தேடிப் பார்த்தான்.

ராமனுடைய துயரம் வர வரக் கடல் போல் பொங்கிற்று. உன்மத்த நிலை அடைந்து விட்டான். ஒவ்வொரு மரமாகச் சென்று அவற்றைக் கூவி அழைத்துப் பிரலாபிக்க ஆரம்பித்தான்.

''அசோக மரமே! உனக்கு நன் றாகத் தெரியும். சீதை எங்கே என்று சொல்லுவாய். என் சோகத்தைத் தீர்க்க மாட்டாயா?''

''ஓ, பனை மரமே! அவள் எங்கே இருக்கிறாள்? உனக்குக் கட்டாயம் தெரியும். சொல்வாயே!''

இவ்வாறு செடி, கொடி, மரம் ஒவ் வொன்றையும் கேட்டுக் கொண்டே பைத்தியம் பிடித்தவனாக வனமெல்லாம் திரிந்தான்.

வனத்தில் கண்ட மிருகங்களை யெல் லாம் இம்மாதிரியே கேட்டுக் கொண்டு அலைந்தான்.

''ஏ, புலியே! அந்த யானையும் மானும் எனக்கு உண்மை சொல்லப் பயப்படுகின்றன. உனக்குத்தான் பயம் என்பது இல்லையே, நீயாவது சொல், உனக்குக் கட்டாயம் தெரியும்.''

இப்படி யெல்லாம் சொல்லிச் சொல்லி அழுதான்.

''ஒளிந்து கொண்டிருக்கிறாய். அதோ பார்த்து விட்டேன். போதும் உன் விளை யாட்டு. இனி நிறுத்து. என்னால் பொறுக்க முடியவில்லையே?'' என்று சொல்லி அழுதான்.

இவ்வாறு பிதற்றிக் கொண்டும் அழுது கொண்டும் சுற்றிலுமுள்ள காடெல்லாம் தேடிச் சென்றான். எங்கும் காணாமல் துக்கம் மேலிட்டு, ''ஹா லக்ஷ்மணா! ஹா சீதே!'' என்று கதறித் தரையில் விழுந்தான்.

''லக்ஷ்மணா! எங்குமில்லை, சீதை! அவளை அரக்கர்கள் பிடித்து அங்கம் அங்க மாகப் பிய்த்துத் தின்று விட்டார்கள். நான் இனி என்ன செய்வேன்? உயிர் தங்காது. தந்தை தசரத மகாராஜா வைப் போய்ச் சேருவேன். ஐயோ! அங்கும், 'மகனே, நான் இட்ட ஆணை யைத் தீர்க்காமல் என் முன் வந்து விட் டாயே?' என்று தந்தை கோபிப்பார். நான் கெட்டேன்!'' என்று சேற்றில் அகப்பட்ட யானையைப் போல் வீறிட்டு அழுதான்.

இவ்வாறு ராமன் துயரப்பட்டு, நிலையிழந்து உன்மத்தனைப் போல் கஷ் டப்படுவதைக் கண்டு சகிக்க முடி யாமல் லக்ஷ்மணன் சொன்னான்:

''அண்ணா, இப்படி அழுவது தகாது. இருவரும் சேர்ந்து காடு முழுவதும் தேடிப் பார்ப்போம். உனக்குத் தெரி யுமே, சீதை குகைகளிலும் வனங்களி லும் சஞ்சரிப்பதில் மிகப் பிரியமுடைய வள். ஆற்றில் குளிப்பதிலும் விளை யாடுவதிலும் புஷ்பங்கள் பறிப்பதிலும் மிகவும் ஆசை கொண்டு எங்கேயோ விளையாடிக் கொண்டிருக்கிறாள். பார்ப் போம். நம்மைச் சோதிக்கவே இப்படி அவள் விளையாட்டாகச் செய்கிறாள். வா! இருவரும் தேடுவோம். பிரலாபிக் காதே!''

இருவரும் காடு, மலை, ஆறு, தடாகம் ஓர் இடம் விடாமல் தேடினார்கள்.

''எங்கும் காணவில்லை. லக்ஷ்மணா! நான் என்ன செய்வேன்?'' என்றான் ராமன்.

''புலம்பாதே, அண்ணா! மகா விஷ்ணு பலிச்சக்கரவர்த்தியை அடக்கி மூன்று உலகத்தையும் அடைந்ததுபோல் நீ சீதையை அடைவாய். நிச்சயம். தைரியம் இழக்காதே!'' என்றான் லக்ஷ்மணன்.

''இல்லை, தம்பி! தேடிப் பார்த்தா யிற்று, சீதை எங்குமில்லை. அவளை இழந்தேன். என் உயிர் இனி எனக்கு வேண்டியதில்லை'' என்றான் ராமன்.

(தொடரும்)

# காணக் கிடைக்காத தங்கம்

## அத்தியாயம் ஏழு

"ஆமாங்க! இன்னைக்கு ரெண்டு சாப்பாடு அதிகமாயிட்டதாலே பாரமும் கூடிப் போச்சு. கழுத்து வலிச்சது. கொஞ்சம் தாவு பண்ணிக்கலாம்னு இறக்கி வச்சேன். மறுபடியும் தூக்கித் தலையிலே வைக்க முடியலே. இந்தப் பக்கம் போன ரெண்டு மூணு பேரைக் கேட்டேன். அவங்க திரும்பிக்கூடப் பார்க்காமப் போயிட்டாங்க. நல்ல வேளை நீங்க வந்தீங்க..." என்று தவிப்பும் தயக்கமுமாக நாணக் குழறலுடன் சொன்னாள் அவள்.

"ஓகோ!" என்று பெரிய மனிதத் தோரணையில் தலையாட்டிக் கொண்ட அருணகிரி, "தூக்க முடிஞ்ச அளவு சாப்பாடு எடுக்கிறதுதானே? அதிகத்துக்கு ஆசைப்பட்டால் இப்படித்தான் ஆகும்!" என்றான் சற்று அலட்சியமாக.

இதற்கு உடனே பதில் சொல்ல நினைத்தவள் போல் சட்டென்று அவனை நிமிர்ந்து பார்த்தாள் அந்தப் பெண். பிறகு அந்தக் கேள்விக்குப் பதில் கூற முற்பட்டால் அது தன்னைப் பற்றிய முழு விவரங்களையும் அவனிடம் தெரிவித்தாற்போல் ஆகி விடும் என்று எண்ணியோ என்னவோ மௌனமாகத் தலை குனிந்தாள்.

"ரொம்பத் தூரத்திலிருந்து வரயா? வீடு எங்கே?" என்று குறுஞ் சிரிப்புடன் கேட்டான் அருணகிரி.

"இங்கே, கிட்டத்தான்...."

"கிட்டேன்னா, எங்கே?"

அவள் அவனை ஒரு தினுசாகக் கண்களைச் சுழற்றிப் பார்த்து விட்டுப் பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள்.

"இந்தச் சாப்பாடெல்லாம் எந்தக் கம்பெனி ஆட்களுக்குப் போகுது?"

இதற்கும் அவள் பதில் சொல்லவில்லை.

"ரொம்பத் தூரம் போகணுமோ?"

இவையெல்லாம் தேவையில்லாத கேள்விகள் என்று முகத்தில் அறைந்து சொல்வது போல், "ஹுக்கும்!" என்று ஓர் அழுத்தமான 'ஹம்மிங்'குடன் தலையாட்டினாள். பிறகு அவள் சட்டென்று திரும்பி, தானே தன் சோற்றுக் கூடையைத் தூக்கித் தலையில் வைத்துக்கொள்ளத் தீர்மானித்தவள் மாதிரி அவசரமாகத் தனது முன்றானையைச் சுருட்டிச் சும்மாடு கோல ஆரம்பித்தாள்.

ஜகசிற்பியன்

"அடடே, உனக்கு நேரமாயிடுச்சா? நான் என்னென்னமோ கேட்டுக்கிட்டு நிற்கிறேன்!...



எனக்கும் நேரமாச்சு!" என்று அசடு வழியச் சிரித்துக்கொண்டே வந்து சோற்றுக் கூடையைத் தூக்கி அவள் தலையில் மெல்ல வைத்தான் அருணகிரி.

அவள் அவனைக் கடைக் கண்ணால் நோக்கிக் குறுநகை புரிந்தவாறு தன் தலையில் ஏறிய கூடையைச் சரியாக 'பாலன்ஸ்' பண்ணி நகர்த்தி வைத்துக் கொள்ள முற்பட்டாள். கூடையின் பளு சமப்படாமல் நொடித்து அவளைச் சற்று முன்னால் சாய்த்தது. எதிரே நின்று கொண்டிருந்த அருணகிரி, "பார்த்து! பார்த்து!" என்றபடி, நொடித்துச் சாய்ந்த கூடையைப் பிடித்து நிமிர்த்திய அதே சமயம் அவளும் தள்ளாடி வந்து

அவனுடைய மார்பில் மார்பு முட்ட மோதிக் கொண்டாள்.

அருணகிரியின் நெஞ்சுக்குள் பனிக் கட்டியைச் செருகினாற் போன்ற ஒரு திடீர் ஜில்லிப்பு! திக்குமுக்காடித் திண றிப் போன அவன் அப்படியே திகைத்து விறைத்து நின்று விட்டான்.

அந்தப் பெண்ணும் அதே போன்ற அதிர்ச்சிக்கு உள்ளானவள் மாதிரி சடா ரெனப் பின்னால் சாய்ந்து தட்டுத் தடு மாறி நின்றாள். அவளின் அழகிய கண் ணிமைகள் பயத்தால் படபடத்தன. முகமெங்கும் குப்பென்று வியர்த்துக் கொட்டி விட்டது. வெட்கத்துடன் பார்வையைத் தாழ்த்திக் கொண்ட அவள் அங்கிருந்து சரேலெனத் திரும்பி நடக்கலானாள்.

காந்தத்தால் கவரப்பட்டவன்போல் அவள் செல்லும் திசைப் பக்கம் தன்னை அறியாமலே திரும்பி நின்று கொண்ட அருணகிரி அவளையே விழியசைக்காமல் பார்த்தான்.

சற்றுத் தூரம் சென்றுவிட்ட அவள் ஏனோ தயங்கி நின்றாள். தலையில் இருக் கும் கூடையைச் சரிப்படுத்திக்கொள் ளும் பாவனையில் அப்படியும் இப்படியு மாக இடை வளைய நெளிந்தாள்.

தனக்கு உதவி செய்தவனிடம் சொல் லிக்கொள்ளாமல் வந்து விட்டோமே என்று நினைக்கிறாளா?—

அவள் தன்னைத் திரும்பிப் பார்ப் பாள் என்று ஆவலுடன் தலையைத் தூக் கிக் குதிகாலை உயர்த்தினான் அருணகிரி. ஆனால் அவளோ பின்னால் திரும்பிப் பாராமலே இடது கையால் கூடை யைப் பிடித்துக் கொண்டும், வலது கையை வீசிக் கொண்டும் ஒயிலாக நடக்க ஆரம்பித்து விட்டாள்.

அவ்வளவு கனமான கூடையைச் சுமந் திருந்தும் அவ்வளவு அழகாக நடக்க அவளால் எப்படி முடிகிறது?...

தனக்குள் மெல்லச் சிரித்துக்கொண்ட அவன் தன்னுடைய சைக்கிளில் ஏறிக் கிளம்பினான்.

அன்று வழக்கத்துக்கு மாறாக மாலை ஆறு மணிக் கெல்லாம் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு ஏழுமலையின் எதிரில் வந்து நின்றான் அருணகிரி.

''என்ன தொரை பொழுதோட கிளம்பிட்டாரு?'' என்று கண்களை இடுக் கிக்கொண்டு கேட்டான் ஏழுமலை.

''ஆமாம்பா! போகணும்...'' என்று தலையைச் சொறிந்து கொண்டு சொன் னான் அருணகிரி.

''எங்கேடா போகணும்?''

''வீட்டுக்கு!''

''நேத்திக்குக்கூட ஏழு மணிக்கே ஓடிப்பிட்டியே?''

''ஆமாம்பா!''

''என்னடா கேட்கிறேன், தெனு வட்டா பதில் சொல்லறே?''

''இல்லேப்பா!''

ஏழுமலை அவனை ஒரு விநாடி கூர்ந்து நோக்கினான். பிறகு, ''எட்டு மணிக்குத்தானேடா கடையைச் சாத்தறது? நீ இதுக்குள்ளாற தினம் கிளம்பிட்டேன்னா எப்படி?'' என்றான் அடித் தொண்டையில்.

''இனிமேல் நான் ஆறு மணிவரை யில்தான் வேலை செய்வேன்பா!'' என்று அருணகிரி அமைதியாகப் பதிலிறுத்தான்.

''ஓகோ! கூடாதுன்னு ஸ்ட்ரைக் நோட்டீஸ் கொடுப்பியோ?'' என்று கேலியாகக் கேட்ட ஏழுமலை, ''சீ, கய்தே! கய்தே! போய் வேலையைப்



பாருடா சோமாறி!'' என்று திடீரெனச் சீறிக் கூவியவாறு குனிந்து ஸ்பானர் ஒன்றை எடுத்து வீசி எறிய ஓங்கினான். அடுத்த கணம் யாரோ ஒரு பெரிய மனிதர் வருவதைப் பார்த்து விட்டவன் போல் சட்டென்று தன் கையிலிருந்த ஸ்பானரைக் கீழே போட்டு விட்டு எழுந்து நின்று கொண்டான்.

அருணகிரி திரும்பிப் பார்த்தான். ஏழுமலையின் மகன் செல்லத்துரைதான் சைக்கிளில் வந்து இறங்கினான்.

''போடா, போ! உன் அத்தானைப் பார்த்து நான் பேசிக்கிறேன்'' என்று உள்ளடங்கிய குரலில் கறுவின ஏழுமலை, ''வேலை கத்துக்கிட்டானில்லே? அதான் குரு முதுகிலேயே கண்ணும்பு தடவப் பார்க்கிறான் பையன்!'' என்று எரிச்சலுடன் தனக்குள் முணுமுணுத்தான். உடனே மலர்ந்த முகத்துடன், ''வா, ராஜா! இப்பத்தான் காலேஜ் லேருந்து வர்றயா? வா, இப்படி உட்காரு!'' என்றான் அன்பும் பணிவுமாக.

தன் தந்தை சுட்டிக் காட்டிய நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான் செல்லத்துரை. அந்த விசித்திர அப்பன் — மகனை ஆச்சரியத்துடன் மாறிமாறிப் பார்த்த அருணகிரிக்குச் சிரிக்க வேண்டும் போல் ஆகி விட்டது. சிரித்தால் என்ன நடக்கும் என்பது அவனுக்குத் தெரியும். எனவே வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டு, ''நான் வரேம்பா!'' என்றவாறு அங்கிருந்து புறப்பட்டு விட்டான்.

அவனைப் பற்றி ஏழுமலை தன் மகனிடம் ஏதோ புகார் கூறித் திட்டுவது அருணகிரியின் காதில் விழுந்தது. அதை அவன் சட்டை செய்யாமல் மேலே நடக்கலானான்.



கடந்த இரண்டு தினங்களாகத் தன்னுள் ஏற்பட்டு வரும் மாறுதல்களை நினைக்க நினைக்க அவனுக்கே ஆச்சரியமாகத்தான் இருந்தது.

'இதற்கு முன்னெல்லாம் என் கடை முதலாளியை ஒரு வார்த்தையும் பேசாமல், அவரது வசவுகளையும், கெடுபிடிகளையும், அடி உதைகளையும் பொறுமையோடு சகித்து வந்த நான், நேற்றும் இன்றும் மட்டும் அவரிடம் எப்படி இவ்வளவு துணிவோடும் விரைப்போடும் நடந்து கொண்டேன்?....'

அருணகிரி அலட்சியமாகத் தலையாட்டிக் கொண்டு, 'பொறுத்தார் பூமியாள்வார் என்ற காலம் மலையேறிப் போச்சு; இந்தக் காலத்திலே பொறுமைசாலியா இருக்கிறவன் முதுகில் பொட்டைமாறிகூடக் குதிரை ஏறப் பார்க்கிறான்!' என்று தனக்குள் முனகினான்.

'ஆமாம்; இந்த ஞானோதயம் எல்லாம் இரண்டு நாட்கள் முன்வரை எனக்குத் தோன்றாமல் இருந்து, இப்போது மட்டும் தோன்றியது ஏன்?'

அந்தப் பார்சி கோயிலண்டை நடந்துகொண்டிருந்த அவன் மெல்லச் சிரித்துக் கொண்டே சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தான். தன் மனத்தில் இருந்த கேள்விக்கு விடை கண்டு பிடித்து விட்டவன் போல் மீண்டும் சிரித்தான்.

'அந்த இரட்டைப் பின்னல்காரி என்ன குறும்புக்காரியா யிருப்பாள்! நேற்று அவள் தன் சைக்கிளுக்குக் காற்று அடிக்க வந்தது நிஜமாயிருக்கலாம். ஆனால் இன்று? காற்று இருக்கும் சக்கரத்துக்குக் காற்றடிக்க வந்திருக்கிறாளே! நானும் அதில் இருந்த காற்றைப் பிடுங்கி விட்டு மறுபடியும் அடித்துக் கொடுத்தேன். அப்படிக் காற்றடித்தபோது என்னைப் பார்த்து அவள் ஏன் சிரித்தாள்? நான் காற்றடிப்பதை வேடிக்கை பார்ப்பதற்காகவே அவள் வந்தாளா?'

அவனுக்குத் திடீரென்று அவமானம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. முகத்தைச் சுளித்தபடி சற்று வேகமாக நடக்கலானான். உடனே அந்தச் சோற்றுக்கூடைக்காரியின் நினைவு அவன் மனத்தில் ஜில்லென்ற ஓர் உறைப்புடன் தலை தூக்கியது.

'அவள்தான் எவ்வளவு நல்ல பெண்! அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகிய அத்தனை குணங்களும் அவளிடம் இருக்கக் கண்டேன். ஆனாலும் அவளுடைய தலைவிதி இத்தனை இளம் வயதில் ஓர் ஆண் மகனாலும் தூக்க முடியாத



அளவு சோற்றுக் கூடை சுமந்து தன் வயிற்றுப்பாட்டுக்காக உழைக்க வேண்டியிருக்கிறது. அவளுடைய குடும்பம் எத்தகைய வறுமை நிலையில் இருந்திருந்தால் இந்த வேலையை அவளது பெற்றோர் அவளைச் செய்யும்படி விட்டிருப்பார்கள்?'

மெல்லப் பெருமூச்சு விட்டபடி நடந்த அருணகிரி, சட்டென்று எதையோ நினைத்துக் கொண்டவனாய்த் தன் மார்பைத் தொட்டுத் தடவிப் பார்த்துக் கொண்டான். மறுகணம் அவன் உடல் எங்கும் இனம் புரியாத ஓர் இன்பச் சிலிர்ப்பு ஏற்பட்டுப் புளகித்தது. தன்னையே தான் பார்க்க வெட்கப் படுகிறவன்போல் தோள்களைக் குறுக்கித் தலை குனிந்தபடி வாய் விட்டுச் சிரித்தான்.

காலில் ஏதோ கல் இடறவே ஒரு துள்ளுத் துள்ளிச் சாலையை விட்டு நடைபாதை மேல் ஏறிக் கொண்டு நொண்டி நொண்டி நடந்த அவன் இப்போது திடுமென்று வேறொன்றை எண்ணிப் பார்த்தான்.

'ஆமாம்; என் அத்தான் ரத்தினவேலுவிடம் ஏதோ சொல்லப் போவதாக ஏழுமலை சொன்னாரே, அது என்ன?'

ரத்தினவேலும் ஏழுமலையும் நீண்ட நாள் நண்பர்கள் என்பதும், அவர்கள் தினமும் முன்னிரவு வேளையில் சாராயக் கடையிலே சந்தித்துக் கொள்கிறவர்கள் என்பதும், ரத்தினவேலு சொல்லியே ஏழுமலை தன்னைச் சைக்கிள் ரிப்பேர்க் கடையில் வேலைக்கு வைத்துக் கொண்டான் என்பதும் அருணகிரிக்குத் தெரியும்.

'ஒருகால் நேற்றும் இன்றும் அந்த இரட்டைப் பின்னல்காரி தன் சைக்கிளுக்குக் காற்று அடிக்கும் சாக்கில் வந்து என்னைப் பார்த்து விட்டுப் போனதையும் அவளிடம் நான் குறும்புத்தனமாக ஏதேதோ பேசித் தமாஷ் பண்ணியதையும், என்னை அவள் கள்ளத்தனமாகப் பார்த்துச் சிரித்ததையும் ஏழுமலை காது கொடுத்துக் கேட்டுக் கவனித்துக் கொண்டிருந்தாரோ? இதனாலேயே நான் வேலையில் நாட்டமின்றிப் பொழுதோடு வீட்டுக்குக் கிளம்பி விடுவதாகத் தீர்மானித்து, அந்த விவரங்களை என் அத்தான் ரத்தினவேலுவிடம் சொல்லப் போவதாகச் சொன்னாரோ?'

திடுமென்று ஒருவித பயம் பீடித்துக் கொள்ளவே, உல்லாசமாக நடந்து கொண்டிருந்த அவன் சட்டென்று நின்றான். வந்த வழியே மறுபடியும் சைக்கிள் கடைக்குத் திரும்பிப் போய்



உருக்காலை
குறித்து வருந்தப்
படுவதோ ஒரே ஜீவன்
சேலம் மாம்பழம்!

கணவன்மார்கள் மனைவியரின் எந்தத் தாக்குதலையும் சமாளிக்கத் தயார்!





விடலாமா என்று எண்ணிப் பின்னல் திரும்பிப் பார்த்தான்.

அதே சமயம், அவன் அருகில் ஒரு சைக்கிள் வந்து நின்றது. ''ஹலோ! அருண்! என்ன, இவ்வளவு சீக்கிரம் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டே?'' என்று மெல்லச் சிரித்துக் கேட்டுக் கொண்டே சைக்கிளிலிருந்து கீழே இறங்கினன் செல்லத்துரை.

ஏற்கனவே பயந்து விறு விறுத்துப் போயிருந்த அருணகிரியை, இப்போது சற்றும் எதிர்பாராத விதமாகச் சைக்கிள் கடை முதலாளியின் மகன் பக்கத்தில் வந்து நின்றதால் மேலும் பயம் பிடித்து உலுக்க ஆரம்பித்து விட்டது. அவன் திருதிருவென விழித்துப் பார்த்தான்.

''நீ செய்தது சரிதான் அருண்! காலம்பற எட்டு மணியிலிருந்து ராத்திரி எட்டு மணி வரையில் யாரால்தான் வேலை செய்ய முடியும்? துணிக் கடையா, மருந்துக் கடையா உடம்பை அலட்டிக் கொள்ளாமல் வேலை பார்க்கிறதுக்கு? சைக்கிள் ரிப்பேர்க் கடையாச்சே! என் அப்பா எப்பவும் இப்படித்தான், பிறத்தியார் கஷ்டங்களைப் புரிஞ்சுக்கவே மாட்டார். சைக்கிளை வாடகைக்குக் கொடுத்துத் திரும்பி வந்து சேருகிற நேரத்தை மட்டும் கரறாகக் கணக்குப் போட்டுப் பணத்தைக் கறந்து விடுவார்; ஆனல் தம் கிட்டே வேலை பார்க்கிறவங்க நாளெல்லாம் உழைச்சாலும் அவருக்குத் திருப்தி ஏற்படாது. நேரக் கணக்கும் போட்டுப் பார்க்க மாட்டார்'' என்று சலிப்புடன் சொன்ன செல்லத்துரை தன் சைக்கிளை வலது கையால் ஒரு ஸ்டைலாகத் தள்ளிக் கொண்டு மெல்ல நடக்கலானான்.

அருணகிரிக்கு ஒரே ஆச்சரியம்! ஏழுமலையின் பிள்ளையா இப்படிப் பேசுகிறன்? அதுவும் அருணகிரியிடம் வந்து! இதற்கு முன் இவனிடம் அவன் தானுக எதுவும் பேசியதே இல்லை. சைக்கிள் கடைக்கு வந்தால் தன் தந்தையிடம் மட்டும் இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டுப் போவானே தவிர இவனைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டான். இவனுக ஏதாவது கேட்டாலும் வாய் திறந்து பதில் சொல்லாமல் கையை அல்லது தலையை ஆட்டுவான். சில சமயம் ஒன்றுமே சமிக்ஞை காட்டாமல் அலட்சியமாகவும் இருந்து விடுவான். 'படிக்கிறோம் என்ற தலைக்கனம் போலும் இவனுக்கு' என்று எண்ணி உள்ளூற மனம் கசந்து கொள்வான் அருணகிரி. அப்படிப்பட்டவன் இப்போது இவ்வளவு சகஜமாக இவனிடம் வந்து பேசுகிறனே! —

''இதெல்லாம் நான் உன்கிட்டே மாத்திரம் வந்து சொல்றதாக நினைக்காதே அருண்! என் அப்பாவிடமும் சொல்லி விட்டுத்தான் வந்தேன். அவருக்கு இப்பத்தான் புரிஞ்சது; இனிமேல் அவர் உன்னை நேரத்தோடு அனுப்பி விடுவார்னு நினைக்கிறேன்'' என்றான் செல்லத்துரை.

அருணகிரியால் இன்னமும் தனக்கு ஏற்பட்ட வியப்பிலிருந்தும் திகைப்பிலிருந்தும் விடுபட முடியவில்லை. அவனை மேலும் கீழும் பார்த்தபடி தயங்கித் தயங்கிப் பின்னல் மெல்ல நடந்தான்.

சட்டென்று நின்ற செல்லத்துரை, ''ஆமாம்; நீ ஏன் இப்ப பொழுதோட வீட்டுக்குப் போறே? எதுனுச்சும் அவசர வேலை இருக்குதா?'' என்று கேட்டவாறு வெகு சகஜமாகத் தன் இடது கையை அவன் தோள் மீது போட்டான்.

''ஊஹூம்! அதெல்லாம் ஒண்ணுமில்லேப்பா! சும்மாதான் போறேன்'' என்று நெளிந்து குழறினன் அருணகிரி. அவனுடைய வியப்பு பன்மடங்காகியது.

இருவரும் சற்றுத் தூரம் வரையில் மௌனமாக நடந்து கொண்டிருந்தனர்.

''எனக்கு ரொம்ப நாட்களாகவே உன்கூட ஃப்ரெண்ட்லியாப் பேசணும், பழகணும்னு ஆசை. நேரம்தான் கிடைப்பதில்லை. என்னை என்னமோ உன் முதலாளியின் மகன்னு பெரிசா நினைச்சுடாதே! முதலாளியாவது, மண்ணாங்கட்டியாவது! சில மாடுகள் வண்டி இழுத்துக்கிட்டு ஓடுது; இன்னும் சில மாடுகள் செக்கைச் சுத்திச் சுத்தி வருது. இவற்றிலே எது ஒஸ்தி? எல்லாம் உழைக்கிற மாடுகள்தான்! உன்னை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. அதனுல்தான் நானே வந்து உன்னிடம் பேசறேன். நாம் இனிமேல் சிநேகிதர்களாகப் பழகுவோம். நான் அதை விரும்பறேன். நீயும் விரும்புவேன்னு நினைக்கிறேன்....'' என்று சொன்ன செல்லத்துரை, நட்புரிமையோடு அருணகிரியின் முதுகில் ஒரு தட்டுத் தட்டி, ''என்ன பிரதர்! பேசாமல் இருக்கிறே?'' என்றான் சிரித்துக் கொண்டே. ''சரி, சரி; வா! அதோ, அந்த ஹோட்டலுக்குப் போய்க் காப்பி சாப்பிட்டு விட்டுப் போவோம்.''

அருணகிரியின் பதிலையோ சம்மதத்தையோ எதிர்பாராமல் அருகிலிருந்த ஓர் உயர்தரமான ஹோட்டலண்டை சைக்கிளை நிறுத்தி விட்டு உல்லாச நடை போட்டு உள்ளே சென்றான் செல்லத்துரை. (தொடரும்)



# காணாமல் போன நேரு

— அழ. வள்ளியப்பா

மாலையில் ஒருநாள் நேருவை வீட்டில்
காணோம், காணோமே!
மாளிகை முழுதும் தேடிப் பார்த்தும்
காணோம், காணோமே!
சோலைகள் எங்கும் சுற்றிப் பார்த்தும்
காணோம், காணோமே!
சுறுசுறுப் பாகத் தேடிப் பார்த்தும்
நேருவைக் காணோமே!

காவலர் எங்கும் தேடிப் பார்த்தும்
காணோம், காணோமே!
கலக்கினர் டில்லி நகரம் முழுவதும்
காணோம், காணோமே!
தீவிர மாகப் பற்பலர் தேடியும்
காணோம், காணோமே!
தெரிந்தவர்க் கெல்லாம் டெலிபோன் செய்தும்
நேருவைக் காணோமே!

எந்த நிகழ்ச்சியும் அந்தச் சமயம்
இல்லை. ஆதலினால்,
'எங்கே சென்றார்? எங்கே சென்றார்?'
என்றே கேட்டனரே.
வந்தவர் போனவர் காதில் இந்தச்
செய்தி விழுந்திடவே,
மாநகர் எங்கும் காட்டுத் தீபோல்
பரவிட லானதுவே!

காவலர் பலரும் நகரம் முழுவதும்
தேடிப் பார்த்திடவே
கடைசியில் நேருவைக் கண்டு பிடித்தனர்
கண்டு பிடித்தனரே!
ஆவல் பொங்கப் பூங்கா ஒன்றில்
குழந்தைகள் மத்தியிலே
அடடா, நேரு இருந்தது கண்டு
அசந்தே போயினரே!

குழந்தைகள் அங்குப் பூங்கா நடுவில்
கூடிப் பாடிடவே,
குஷியாய் நேருவும் குழந்தை போலவே
ஆடிப் பாடினரே.
மழலை மொழியைக் கேட்டுக் கேட்டு
மகிழ்ச்சியில் மூழ்கினரே.
மறந்தனர் இந்த உலகம் யாவையும்
மறந்தே போயினரே!

கோடை வெயிலைப் போன்றது அரசியல்
உலகம் என்றாலோ
குளுகுளு தென்றல் காற்றைப் போன்றது
குழந்தைகள் உலகம்தான்!
தேடியே வந்தார் குழந்தைகள் உலகைத்
திருட்டுத் தனமாக!
தெரிந்தது நேருவின் குழந்தை உள்ளம்
தெள்ளத் தெளிவாக!

(திரு கே. என். மேனன் அவர்கள் எழுதியுள்ள 'லிட்ரன்ஸ் நேரு' என்ற புத்தகத்தில் 1957 மே மாதம் நடந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ள உண்மை நிகழ்ச்சி.)



Who cares if your hair is different?

# Sunsilk cares –
## with 3 special shampoos

**Pick the one that's perfect for you**

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease...gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair...revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** – more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-140

# குடை ராட்டினம்

எஸ். ரங்கநாயகி




## அத்தியாயம் 19

ஆனந்த் மெள்ள தேவகியிடம் ரமா வீட்டில் நடந்ததைக் கூறினான். ''அம்மா! இதில் எத்தனையோ சிக்கல்கள் இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அதனால் நீங்கள் இதைப் பற்றி ஒருவரிடமும் கூற வேண்டாம்.''

''ஆனந்த்! என் வேதனை இன்னும் அதிகமாகிறது. உன்னிடம் அவன் பேசிய சொற்களைக் கவனித்தால் ரூபகுமார் இப்போதெல்லாம் அவனை விட்டு நகருவது போல் தோன்றுகிறது. அதை அவன் விரும்பவில்லை...''

ஆனந்த் திடுக்கிட்டான். ''என்னம்மா சொல்கிறீர்கள்?''

''ஆமாம், ஆனந்த்! 'இவரை அநியாயமாக வீட்டை விட்டுத் துரத்தி விட்டீர்களே, இது நியாயமா?' என்று அவன் ஏன் கேட்க வேண்டும்? அவன் வீட்டுக்கு வருவதையே நிறுத்திக் கொண்டு விட்டானே என்னவோ?''

''அவன் அவ்வளவு தூரத்துக்குக் கயவனாக மாறியிருக்க முடியுமா அம்மா?''

''இல்லை. நானாகச் சொல்கிறேன்... அல்லது வேறு காரணமாகவும் இருக்கலாம்'' என்றாள் அவள்.

விருட்டென்று எழுந்தான் ஆனந்த். கோசல்ராமை அப்போதே கிளம்பி ரமாவின் வீட்டுக்குச் செல்லத் தூண்டினான். கோசல்ராம் ரமாவின் வீட்டுக்குச் சென்றார்.

தந்தையின் கார் காம்பவுண்டுக்குள் நுழைவதைப் பார்த்ததுமே ரமா ஓடிச் சென்று ஒரு கம்பளியைப் போர்த்திக் கொண்டு முன் ஹாலில் சோபாவில் படுத்து விட்டாள்.

கோசல்ராம் நுழைந்ததுமே நிம்மதியாக மூச்சு விட்டார். 'ரமா வீட்டில் தான் இருக்கிறாள். ஆனால் இப்படிப் படுத்துக் கிடக்கிறாளே!'

''ரமா!...'' மகளின் அருகில் அமர்ந்தார் கோசல்ராம்.

''வாருங்கள், அப்பா!'' மெள்ள எழுந்து அமர முயல்வது போல் காட்டினாள் ரமா.

''ரமா! உனக்கென்னம்மா உடம்பு?'' வாஞ்சையோடு மகளின் தலையைக் கோதிவிட்டார் கோசல்ராம்.

''ஒன்றுமில்லை அப்பா! மாதங்கள் ஏறுகின்றன அல்லவா? தள்ளாமை!''

''உன் அம்மா இருந்தால் உன்னை இப்படி விடுவாளா?''

''அதனால் என்னப்பா? எப்போதும் டாக்டரின் கவனிப்பில்தான் இருக்கிறேன். ஒரு தாயாருக்கும் மேலாக அவள் என்னைப் பார்த்துக் கொள்கிறாள். என்னைப் பற்றிக் கவலை வேண்டாம்.''

''சரியம்மா, சீக்கிரம் கிளம்பு.''

''எங்கேயப்பா?''

''என்ன கேள்வி இது ரமா? நீ இல்லாமல் கல்யாணப் பந்தலே சூன்ய

மாக இருக்கிறது. ரமா எங்கே என்று தான் நாலா பக்கமும் கேள்வி. நேற்று மாலையே ஆனந்தை உன்னை அழைத்து வர அனுப்பினேனும். நீ வீட்டில் இல்லை என்றான்.''

ரமா மனத்தோடு நினைத்துக்கொண்டாள். 'அப்படிக் கூறி ஆனந்த் சமாளித்து விட்டானா?'

''பிறகு இன்று காலை நான் வந்தேன். நீ இல்லை.''

''ஐயோ, பாவம்! நீங்கள் வந்தீர்களா? எனக்குத் தெரியாதே!''

கூற வேண்டி யிருக்கும். அதிகம் பேசி, அலைந்து உடம்பை அலட்டிக் கொள்ளக் கூடாது என்று டாக்டர் வேறு எச்சரித்திருக்கிறார்.''

''ரூபகுமார் எங்கே? அவன் கூட வரவில்லையே?''

''ஓ! உங்களுக்குத் தெரியாதா? அவர் திருச்சிக்கு அவசரமாகப் போய்விட்டார். அங்கு ஆபீஸ் கிளையில் ஏதோ தகராறும். செய்தி கிடைத்ததுமே போய் விட்டார். உங்களுக்குப் போன் செய்வதாகக் கூறினாரே! மறந்து விட்டார் போலிருக்கிறது.''

''சரியாய்ப் போச்சு! அவன் ஊரிலேயே இல்லையா?''

''அப்பா! இந்த விவாகத்தில் நாங்கள் உங்களுக்கு உதவ முடிய




''விவாகத்தையும் மறந்து நீ எங்கே ஓடி விட்டாய்?''

''டாக்டரிடம் தான் போயிருந்தேன். தாங்க முடியாத வயிற்று வலி. அதனால் விடியற்காலையே ஓடி விட்டேன். அவள் ஏதோ மருந்து கொடுத்துத் தன் வீட்டிலேயே தங்கச் சொன்னாள். சற்று முன் தான் திரும்பினேன்.''

''ரமா! இவ்வளவு வயிற்றுவலியில் எனக்கு ஏன் செய்தி அனுப்பவில்லை? தனியாக ஏன் திண்டாடினாய்?''

''காந்தியின் விவாகம் நல்லபடியாக நடக்க வேண்டும் என்பதனால்தான்.''

''இப்போதாவது என்னுடன் வா. ஓர் இடத்தில் படுத்துக் கொண்டிருக்கலாம்.''

''வேண்டாம், அப்பா! இந்த உடம்பில் இங்கு இருப்பதே நலம். அங்கு வந்தால் எல்லோர் கேள்விக்கும் பதில் வில்லையே என்று எவ்வளவு வேதனையாக இருக்கிறது தெரியுமா?''

''நீ கவலைப்படாதே ரமா. ஆனந்தானகவே முன்வந்து பொறுப்புடன் அவ்வளவு ஏற்பாடுகளையும் செய்து விவாகத்தைப் பாங்குற முடித்து விட்டான்.''

''அவருக்கு என் வந்தனங்களைச் சொல்லுங்கள்.''

''ரமா! நான் போய் வருகிறேன்.''



காந்தி! என்னை மன்னித்துவிடு. உன் விவாகத்தை முன்னின்று நடத்தி வைப்பதாகக் கூறினேனே ஒழிய ஒன்றும் செய்ய என்னால் முடியவில்லை. வெண்ணெய் திரண்டுவந்த நேரத்தில் தாழி உடைந்து விட்டது போல் ஆனந்த் மட்டும் குறுக்கிடாமல் இருந்திருந்தால்...?

ஆனந்த் மீதும் குற்றம் சொல்லிப் பயனில்லை. அவள் வீட்டு நிலவரம் அவருக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்? எதையோ நினைத்து உணர்ச்சியை அடக்க முடியாமல் எதையோ பேசி விட்டார்...சென்ற இரவு.. கடவுளே! அதை நினைக்கும் போது இன்னமும் நெஞ்சு குமுறுகிறது. உடலெல்லாம் நடுங்குகிறது...

ரமா பல வேதனைச் சுழல்களுக்குப் பிறகு மெள்ள மாடிக்குப் படியேறிச் சென்றாள். அங்கு ரூபகுமார் கண் மூடிப் படுத்திருந்தான்.

கோசல்ராம் தன் வீட்டுக்கு வந்ததுகூட அவனுக்குத் தெரிந்திருக்குமோ என்னமோ?

கோசல்ராம் திரும்பியதுமே ஆனந்த் கேட்டான்: ''ரமாவைப் பார்த்தீர்களா?''

''பார்த்தேனப்பா. நாம் ஏதோ என்னவோ என்று பயந்து விட்டோமே, அவளுக்கு உடம்பு சரியில்லையாம். அதற்காக டாக்டர் வீட்டுக்குப் போயிருந்திருக்கிறாள். இங்கு கலவரப்படுத்த வேண்டாம் என்றுதான் சொல்லி அனுப்ப வில்லையாம்.''

''ரமாவுக்கு உடம்பா சரியில்லை?'' என்று மிகுந்த வியப்புடன் ஆனந்த் கேட்டான்.

'' ஆமாம், ஆனந்த்! நான் போயிருந்த போதே அவள் இழுத்துப் போர்த்திப் படுத்திருந்தாள். வெகு துணிச்சலான பெண். ரூபகுமார் கூட ஊரில் இல்லை. அவசர வேலையாகத் திருச்சிக்குப் போயிருக்கிறான்...''

ரூபகுமார் திருச்சிக்குப் போயிருக்கிறான் என்று கூறியதுமே ரமா எல்லாவற்றையும் மறைத்திருக்கிறாள் என்பதை ஆனந்த் நன்றாகப் புரிந்துகொண்டான். அவன் மனம் மேலும் குழம்

கோசல்ராம் விடைபெற்றுச் சென்றார்.

அவர் சென்றதுமே குலுங்கிக்குலுங்கி அழுதாள் ரமா... 'அப்பா! அப்பா! அப்பாவி அப்பா! என்னை மன்னித்து விடுங்கள். எவ்வளவு பொய்யெல்லாம் சொல்லி உங்களை ஏமாற்றி விட்டேன்! உங்கள் களங்கமற்ற குணத்தைஎப்படி உபயோகப்படுத்தி விட்டேன்! நான் உங்கள் பெண்ணாக இருக்கத் தகுதியற்றவள். நான்...வேண்டுமென்று இப்படிச் செய்யவில்லை. உங்கள் மனத்தை வேதனைக்கு உள்ளாக்கக் கூடாது என்பதே என் விருப்பம். என் குடும்பத்தை - நான் நடத்தும் இல்லறப் படகில் காணும் ஓட்டைகளை நீங்கள் கண்டு விட்டால் நீங்கள் தவித்து விடுவீர்கள்... ஐயோ, அப்பா! முன்போல் பாசமில்லாமல் இருந்திருக்கக் கூடாதா? ஏன் பாசத்தை வளர்த்துக் கொண்டீர்கள்!



## குரோட்டன் செடி
ஸ்ரீமதி பரிமளா சோமேசுவர் (தெலுங்கு)

## பார்வை
திரு பிரபாகர் மாச்வே (ஹிந்தி)

## துர் மரணம்
திரு நரேந்திரநாத் மித்ர (வங்காளி)

## தங்க அரளி
திரு சரத் விட்டல் வாரட்கர் (மராத்தி)

**அடுத்த சிறுகதைச் சிறப்பிதழ் மே 31**

பித் தவித்தது. ரமாவின் வாழ்வில் என்ன நடந்து கொண்டிருக்கிறது?

வரவேற்பு முடிந்ததும் மாலையும் கழுத்துமாக வாசு — காந்தியை ரமாவின் வீட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்று கோசல்ராம் திட்டமிட்டார்.

வாசு முதலில் ரமாவின் வீட்டுக்குப் போகவே சம்மதிக்கவில்லை. ரிஸப்ஷனுக்குப் பிறகு வாசுவையும் காந்தியையும் மாலையோடு அழைத்துச் சென்று காட்ட வேண்டுமென்று கோசல்ராம் முழு மனத்துடன் விரும்பினார். அவருக்கு ரமா மீது தனிப்பட்ட ஒரு பச்சாதாபம் ஏற்பட்டது. அவள் விவாகம் ஆடம்பரமாக நடக்கவில்லை. தங்கையின் விவாகம் ஆடம்பரமாக நடக்கும்போது அதில் பங்கெடுக்க முடியாமல் உடம்பு இப்படிக் கெட்டு நிற்கிறது. விவாகத்தில்கூடப் பங்கெடுக்க முடியாத சோர்வு அவளுக்கு இருக்கும் எனத் தெரிந்திருந்தால் அவளுடைய பிரசவத்துக்குப் பிறகு இவ்விவாகத்தை வைத்துக் கொண்டிருக்கலாம்! ஏனோ ரமா துரிதப்படுத்தினாள். வாசுவும் அவசரப்பட்டதாகத் தெரிந்தது.

கோசல்ராமின் விருப்பத்தை அறிந்த தேவகிக்குத் திக்கென்றது. வாசுவும் ரமாவும் முன்பு காதலித்தவர்கள். அதனால் மணக் கோலத்தில் சந்தித்தால் மனப் போராட்டம் எப்படியெல்லாம் ஆரம்பிக்குமோ? அதன் முடிவு எந்தக் கோணத்தில் போய் நிற்குமோ?

தேவகி என்ன பதில் கூறுவதென்று தெரியாமல் தவித்தாள். ஆனந்த் இடையே கூறினான்: ''இப்போது இவர்களை அழைத்துச் சென்றால் ரமா குதூகலத்தில் படபடத்து எழுந்திருப்பாள். திடீரென்று போய் நின்றால் எதிர்பாராத அந்த நிகழ்ச்சியினால் அவள் உடல் நிலையும் பாதிக்கப்படலாம். நிறையப் புகைப்படங்கள்தான் எடுத்திருக்கிறோமே, அவற்றைக் காட்டினால் போயிற்று.''

''புகைப்படம் நேரில் பார்ப்பது போல் ஆகுமாப்பா? நாம் திடீரெனப் போய் நிற்க வேண்டாமே. முதலில் போன் செய்வோமே!''

தேவகியும் ஆனந்தும் வாயடைத்து நின்றார்கள். இவ்வளவு அப்பாவியான மனிதரும் உண்டா? பெரிய மகளின் நிலையை இன்னும் உணராதவராக இருக்கிறாரே! ரமா தந்தையின் எதிரே எப்படியெல்லாம் நாடகமாடினாளோ? இல்லாவிடில் இப்படிப் புரிந்துகொள்ளாமல் இருக்க முடியுமா?

''ஆகட்டும். வாசு சம்மதப்பட்டால் அழைத்துச் செல்லலாம்'' என்று மட்டும் தேவகி கூறிவிட்டாள்.

தேவகி வாசுவைத் தனியே சந்தித்துக் கூறினாள்: ''வாசு! உன்னையும் காந்தியையும் ரமாவின் வீட்டுக்கு வரவேற்பு முடிந்த பிறகு அழைத்துச் செல்லக் கோசல்ராம் விரும்புகிறார்.''

கேட்டதுமே வாசு குதித்தான். ''என்னது? அந்தக் கர்வம் பிடித்தவள் வீட்டுக்கு நான் போக வேண்டுமா? என்னைக் கேட்காமல் என்ன ஏற்பாடு இது? வேண்டுமானால் அவர் தம் மகளை

அனுப்பிக் கொள்ளட்டும். நான் போக முடியாது.''

தேவகி தவித்தாள். ''வாசு! உனக்கு விருப்பமில்லாவிட்டால் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி நின்றுவிடு. ஆனால் அந்தப் பெரியவரை எல்லோருக்கும் எதிரே கண்டபடி பேசிவிடாதே!''

''எல்லாம் எனக்குத் தெரியும். ஒருவரும் உபதேசிக்க வேண்டாம்.''

சற்றுத் தள்ளி நின்றபடி ஆனந்த் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு தான் இருந்தான். வாசு இப்படிக் கோபித்து ரமாவின் வீட்டுக்குப் போகாமல் இருப்பதே நல்லதென்று தோன்றியது அவனுக்கு.

ரிஸப்ஷன் ஆரம்பித்து விட்டது! காந்தி மலர் முகத்தோடு அனைவரையும் வாசுவுக்கு அறிமுகம் செய்து வைத்தாள். அவன் ஏதோ தலையாட்டி வைத்தான். தனக்குத் தெரிந்தவர்களை அவளுக்கு அறிமுகம் செய்துவைக்கும் எண்ணமே அவனுக்கு இல்லை. ஆபீஸ் சிப்பந்திகள் அனைவரும் வந்திருந்தனர்.

ஆனந்த் அவர்களில் ஒருவரை நன்றாக அறிவான். அவரைத் தனித்து அழைத்துச் சென்று மெள்ளப் பேச்சுக் கொடுத்தான். பிறகு அவரிடமிருந்து ஒரு செய்தி தெரிந்து கொண்டு விட்டான். 'ஆபீஸ் டைரக்டர் ரூபகுமார் வெளியூருக்கு எங்கும் சென்றுவிட வில்லை. உள்ளூரில்தான் இருக்கிறார். ஆனால் இப்பொழுதெல்லாம் முன்போல் கலகலப்பாக இருப்பதில்லை. அது மட்டுமில்லை. எதையோ நாடி எங்கோ செல்கிறார்.'

ஆனந்துக்கு நன்றாகப் புரிந்துவிட்டது. ரூபகுமாரின் காரணமாக ரமாவுக்கு ஏதோ மனக் கிலேசம். அதனால்தான் அன்று அவனையும் விரட்டி யிருக்கிறாள், தந்தைக்கும் தெரிய வேண்டாம் என அவரிடமும் பொய் கூறியிருக்கிறாள்.

''என்னப்பா, கல்யாணம் முடிந்ததா? இனியாவது சென்றதை மறந்து ஆனந்தமாக இரு! எங்கே உன் மனைவியை அறிமுகம் செய்து வைக்கவில்லையே!'' என்று சுதர்சனம் கனிப்புடன் கேட்டார்.

''இவள்தான் காந்தி!'' அறிமுகம் செய்து வைத்த வாசு 'மனைவியாம் மனைவி! மனைவி என்று அனுபவிக்கவா அவன் விவாகம் செய்துகொண்டான்? பழிக்குப் பழி! நீ உன் கணவனைத் தேர்ந்தெடுத்தவனுடன் இன்பம் அனுபவிப்பது போல எனக்கொரு மனைவியைத் தேர்ந்தெடுத்து அனுபவிக்கிறேன், பார்' என்று ரமாவிடம் காட்டிக்கொள்ளவே விவாகம் என்ற போர்வைக்குள் புகுந்திருக்கிறான்!

சுதர்சனம் வீட்டுக்குக் கிளம்பிய போது வாசு வாசல் வரையில் வழியனுப்ப வந்தான்.

''கடைசியில் ரமா கல்யாணத்துக்குக் கூட வரவில்லையாமே!'' — சுதர்சனம் கேட்டார்.

''ஆமாம்!''

''மாலையும் கழுத்துமாக உங்கள் இருவரையும் பார்த்து விட்டால் மனம் துயரப்படுமே என்று நினைத்திருப்பாள். சரி, நான் போய் விட்டு வருகிறேன். ஆனந்தமான உன் விவாக வாழ்க்கைக்கு என் நல்வாழ்த்துக்கள்!'' சுதர்சனம் சென்றுவிட்டார்.

அவர் சென்ற பிறகு அவர் கடைசியாகக் கூறியவை மட்டும் அவனிடமிருந்து விடை பெறவில்லை. 'மாலையோடு பார்த்தால் மனம் துயரப்படுமே என்று நினைத்திருப்பாள்.'

'அப்படியானால் கண்டிப்பாக இந்தக் கோலத்துடனேயே அவள் எதிரில் போய் நிற்க வேண்டும்! இதோ பார், உனக்குத் துன்பம் கொடுக்க நான் வந்திருக்கிறேன்' என்று காட்ட வேண்டும். அவளுக்கெதிரில் காந்தியோடு சிரித்துப் பேச வேண்டும். உன்னையே நினைத்து உருகுபவன் நான் இல்லை என்று காட்டி அவளை வதைக்க வேண்டும்.

'ஐயோ! என் ரமாவுக்கா தவிப்பை ஏற்படுத்துவது? காரணம் ஏதேனும் இல்லாமலா அவள் ரூபகுமாரை மணந்திருப்பாள்? அன்று நான் அறைந்த போது கூட எதிர் நின்று சண்டைபோடவில்லையே! சே, இந்தப் பெண்களையே நம்பக் கூடாது. வெறும் வேஷம். தன் டாம்பீகத்தைக் காட்டவே என் வீட்டுக்கு வந்திருப்பாள்...

மனத்தில் மாறுபட்ட சுழல்கள் இருந்து கொண்டே இருப்பினும் கடைசியில் அவனது மனத்தில் விஷ வித்தாக ஊறிவிட்ட சினம்தான் வெற்றிபெற்றது.

கோசல்ராம் ரமாவின் வீட்டுக்குப் போக வேண்டும் என்று கூறியதுமே அவன் சற்றும் தயக்கம் காட்டவில்லை. தேவகி அவனைக் கண்டு வியந்தாள். காந்திக்கு ரமாவின் வீட்டுக்குப் போக விருப்பமில்லாவிடினும் வாசு சம்மதித்து விட்டதால் அவள் வாய் திறக்கவில்லை.

ஆனால் ஆனந்த் தவித்துவிட்டான்.

கிளம்பும் நேரத்தில் வாசு காந்தியை நோக்கி ''காந்தி! இந்தப் புடவையைக் களைந்து விட்டு உடல் முழுவதும் ஜரிகையோடு டிஷ்யூப் புடவையை உடுத்தி வா'' என்றான்.

காந்தி புளகாங்கித மடைந்தாள். வாசு எவ்வளவு ஆசையோடு கூறு

# நெல்கோ திருப்தி
# விலையில் மலிந்தது.
# தரத்தில் சிறந்தது.

- 8 டிரான்ஸிஸ்டர்கள், 1 டயோட்.
- குறைந்த பாட்டரி வோல்டேஜிலும் திறம்பட செயல் அளிக்க ஸ்பெஷல் ஸர்க்யூட் டிஸைன்
- நான்கு 1.5 வோல்ட் செல்களில் இயங்குகிறது.
- மீடியம் ஷார்ட் அலைகளுக்கென்றே பெரைட் ஏரியலுடன் கூடியது.
- புஷ் பட்டன் பாண்ட் ஸ்விட்ச்.
- கவர்ச்சிமிக்க நீண்டதொரு வெர்ட்டிகல் டயல் ஸ்கேல்.

**2 பாண்ட் ட்ரான்ஸிஸ்டர் திருப்தி—ரூ. 175/-**

எக்ஸைஸ் உட்பட (பிரதேச வரிகள் தனி)




NATIONAL EKCO

இப்போது



நெல்கோ

நெல்கோ—ரேடியோ நுணுக்கத்தில் முன்னணி




டாடா எலக்ட்ரிக் கம்பெனிகளின்
எலக்ட்ரானிக் ஆர் & டி
[illegible]
செய்யப்பட்டது

தி நேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கம். லிட்., பம்பாய் • கல்கத்தா • டெல்லி • மதுரை.




# 2001 கில்லிக்ஸ்

## 7 லிட்டர் பிரஷ்ஷர் குக்கர்

6 ஆண்டு உத்தரவாதம் தரும், புகழ்பெற்ற குக்கர்

3 ஸபரேட்டர்கள், துணைக்கருவிகள், கில்லிக்ஸ் [70 பக்க] சமையல் நூல் யாவும் உள்ளிட்டது-- முதல் 2001 சரியான விடைகளுக்கு!

அதோடுகூட

முதல் பரிசு: கெல்வினேட்டர் ரெப்ரிஜிரேட்டர் அல்லது ரூ. 3000 ரொக்கம்!
இரு 2ம் பரிசுகள்: ரேடியோகிராம் அல்லது ரூ. 2000 ரொக்கம்!
மூன்று 3ம் பரிசுகள்: ஓம்கார் 6-வால்வு 4-பாண்டு ஏ.ஸி.ரேடியோ அல்லது ரூ. 600 ரொக்கம்!

முந்துங்கள்! முடிவு தேதி 30 ஜூன் 1970

பங்குகொள்க

# ஹியாவயா புக்கே டால்கம் 'ஏது எந்தப் பூ' போட்டி

A,B,C,D,E, என்ற எழுத்துக் குறிகளோடு வெறும் வரைகோட்டுப் படமாக இங்கே 5 பூக்களைக் காண்க. இந்த 5 பூக்களும் யாவை? கீழே எண் குறிகளோடு உள்ள 12 பூக்களின் பட்டியலிலே இந்த 5 பெயர்களும் உள்ளன. பட்டியலிலுள்ள எந்தப் பெயர் சரியானதோ அதன் நம்பரை (கட்டமிட்ட பகுதிக்குள்ளே) அந்தந்தப் பூவின் எழுத்துக் குறியின் பக்கத்திலே எழுதுக. (இத் தாளின் மூலம் 4 வகை விடைகளை நீங்கள் அனுப்பலாம்).

உதாரணம்: A குறியிட்ட பூவைக் கசகசா என்று நினைத்தீர்களானால், கட்டமிட்ட விடைப் பகுதிக்குள் A-வை அடுத்து 1 எனக் குறிப்பிட்டு, பிறவற்றையும் இதே போல் பூர்த்தி செய்க. (எழுதும் முறைக்குத்தான் இது உதாரணமே தவிர, அந்தப் பூ கசகசா தான் என்று பொருள்படுத்திக்கொள்ள வேண்டாம்).

இதையே நுழைவுத் தாளாகக் கொள்க.




1. ககசா. 2. அானி. 3. அல்லி. 4 அந்தி மந்தாரை. 5. இரவு ராணி. 6. ரோஜா. 7. தாமரை. 8. சண்பகம். 9. முல்லை. 10. செவ்வந்தி. 11. குண்டு மல்லிகை. 12. மயில் கொன்றை.

| | முதல் விடை | இரண்டாம் விடை | மூன்றாம் விடை | நான்காம் விடை |
|---|---|---|---|---|
| A | | | | |
| B | | | | |
| C | | | | |
| D | 6 | | | |
| E | | | | |

பெயர்..................................................

முகவரி..................................................

ஊர்.............................. மாநிலம்..............................

வாங்க உதவிய கடையின் பெயர்..............................

..................................................

ஹிமாலயா புக்கே டால்கம் பவுடர் 5 வகை மணங்களில் வருகிறது: வசந்தம், சந்தனம், ரோஜா, மல்லிகை, கார்னேஷன்—இவற்றுள் எது உங்களைக் கவர்ந்தது? ஏன் அதை விரும்புகிறீர்கள் என்பதை 20 வார்த்தைகளுக்கு மேற்படாத ஒரு வாக்கியமாக ('ஏனெனில்', 'காரணம்' போன்ற எவ்வித சொற்களையும் உபயோகிக்காமல்) எழுதுக. அழகு, சுய சிந்தனை, பொருத்தம்... இவற்றின் அடிப்படையிலேதான் இது மதிப்பிடப்படும்.

**விதிமுறைகள்:** 1. எத்தனை விடைகளாயினும் அனுப்பலாம், ஆனால் ஹிமாலயா புக்கே டால்கம் (பெரிய டப்பா) வாங்கின ரசீது ஒன்று, ஒவ்வொரு விடையுடனும் அனுப்பப்படவேண்டும். அதிக டப்பாக்கள் வாங்கின ரசீதாயிருந்தால் எத்தனை டப்பாக்களோ அத்தனை விடைகள் அனுப்பலாம். இத் தாள்மீது நீங்கள் 4 வகை விடைகள் அனுப்பலாம். 2. உங்கள் பெயரும் முழு முகவரியும் அதற்கான இடத்திலே கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட வேண்டும். 3. நுழைவுத் தாள்களை 1970 ஜூலை 1-க்கு முன்னதாகவே வந்து சேரும்படி இம் முகவரிக்கு அனுப்புக: ஹிமாலயா புக்கே டால்கம் 'பிக்-தி-ஃப்ளவர்' காண்டெஸ்ட், போஸ்ட் பாக்ஸ் நம்பர் 11076, பம்பாய் 20. 4. ரிஜிஸ்டர் தபால் வழியே வரும் நுழைவுத் தாள்களை ஏற்கமாட்டோம். 5. கைப்பட நேரில் சேர்ப்பிக்கப்படும் நுழைவுத் தாள்களை ஏற்கமாட்டோம். 6. தொலைந்துபோன, தாமதித்த, சேதமான நுழைவுத் தாள்களுக்குப் பொறுப்பேற்கமாட்டோம். 7. 5 பூக்களையும் சரியாக இனங்கண்டுரைத்தோரிலே, தலைசிறந்த வாக்கியம் எழுதிய தகுதிப்படி, முதல், 2ம், 3ம் பரிசுக்கு உரியவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவர். தேர்ந்த நடுவர் குழுவினால் நுழைவுத் தாள்கள் சீர்தூக்கப்படும்; அக் குழுவின் தீர்ப்பே முடிவானது, கட்டுப்படுத்துவது. 8. பரிசு வென்றவை உட்பட, எல்லா வாக்கியங்களும் இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் உடைமையாகும்; விளம்பரத்தில் அவற்றை உபயோகிக்கும் தனி உரிமை இக் கம்பெனியினதே. 9. சரியாக 5 பூக்களையும் இனங்கண்டுபிடித்த, முதல் 2001 நுழைவுத் தாள்களுக்கான பரிசுகள் 2001 ஹாக்கின்ஸ் 1-லிட்டர் பிரஷர் குக்கர். எத்தனை நுழைவுத் தாள்கள் அனுப்பியிருப்பினும் ஒரு குடும்பத்திற்கு இப் பரிசு ஒன்றே ஒன்றுதான். எது குடும்பம் என்பதிலே, இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் வரையறுப்பே தீர்ப்பாகும். 10. யாதொரு கடிதப் போக்குவரத்தும் ஏற்கப்படமாட்டாது. 11. பரிசுகள் பகிர்வு பெறா. 12. முதல், 2ம், 3ம் பரிசு வெல்வோரின் பெயர்கள், போட்டி முடிவடைந்த 3 மாதங்களுக்குள் முக்கிய தினப் பத்திரிகைகளில் வெளியிடப்படும். 13. வெல்பவர்கள் தபால்மூலம் அறிவிக்கப்படுவர். 14. இந்துஸ்தான் லீவர் லிமிடெட், இதன் விளம்பர நிறுவனங்கள் ஆகியவற்றின் ஊழியர்களும் இவர்களின் குடும்பத்தினரும் நீங்கலாக, இந்தியாவில் வாழும் யாவரும் போட்டியிடலாம். 15. நுழைவுத் தாள் அனுப்புவதற்கான முடிவு தேதியை ஒத்திப்போட இக் கம்பெனிக்கு முழு உரிமை உண்டு.

1970 ஜூலை 1-க்கு முன்னதான தேதியிட்ட ரசீதுகளை இப் போட்டியில் [illegible]





## சட்டம் படித்த சிறைக் கைதி!

ஆல்பி ஹின்ட்ஸ் என்பவர் இப்பொழுது 'பஞ்ச்' பத்திரிகைக்கு எழுதுகிறார். ஆரம்பத்தில் கட்டடங்களை இடிக்கும் கன்ட்ராக்ட் எடுத்திருந்தார். 1953ல் ஒரு கொள்ளை வழக்கில் சம்பந்தப்பட்டிருந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு பன்னிரண்டு ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்றார். மூன்று முறை சிறையிலிருந்து தப்பி ஓடினார். நேரம் கிடைத்தபோது சட்டம் படித்தார். வக்கீல் ஆனார். 1964ல் தம்மைக் கைது செய்த போலீஸ் அதிகாரி மீது வழக்குத் தொடுத்து வெற்றி பெற்றார்! தமது அநுபவங்களை 'கன்டெம்ப்ட் ஆப் கோர்ட்' என்று ஒரு புத்தகமாக எழுதி நிறைய பணம் சம்பாதிக்கிறார்!

பஞ்ச் -- 'பாபு'

□ □ □ □ □ □ □ □ □□ □ □ □ □ □ □ □ □

கிறார்? அவள் நன்றாக உடுத்துவதில் தான் அவருக்கு எவ்வளவு அக்கறை!

இருவரையும் அழைத்துக் கொண்டு கோசல்ராம் கிளம்பினார். இதற்குள் ஆனந்த் அங்கிருந்த ஒரு ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு பப்ளிக் டெலிபோன் பூத்துக்குச் சென்றான். அவர்கள் வருவது பற்றி ரமாவுக்குப் போன் செய்து விட்டான்.

போன் மூலம் இவர்கள் வரப் போவது தெரிந்ததுமே ரமா ஒரு பாத்திரத்தில் மங்கல நீரைக் கரைத்து வைத்துக் கொண்டாள். அப்பாவை நினைத்து அவள் உருகித் தவித்துப் போனாள். அவளுக்குக் காட்ட வேண்டுமென்று எவ்வளவு பாசத்தோடு அழைத்து வருகிறார்! ஆனால் அவள் வீட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளை அவர் அறிந்து விட்டால்...?

'ஆண்டவா! அப்பாவுக்கு எல்லாம் தெரியும்படி செய்து விடாதே!'

அதோ அவர்கள் வந்துவிட்டார்கள். ரமா தன்னைத் தயாரித்துக் கொண்டாள், வரவேற்புக்கு!

கோசல்ராம் முதலில் இறங்கி உள்ளே வந்தார். ''ரமா! வாசலில் யார் வந்திருக்கிறார்கள், ஓடி வந்து பார்!'' எவ்வளவு குதூகலமாகக் கூறினார் அவர்!

ரமா மெள்ள எழுந்து தயாராக வைத்திருந்த மங்கல நீரை எடுத்துக் கொண்டாள்.

''ஏதும்மா எல்லாம் தயாராக வைத்திருக்கிறாயே! இவர்களை நான் அழைத்து வருவேன் என்று உனக்குத் தெரியுமா?''

ஆனந்த் போன் செய்ததை ரமா கூறவில்லை. ''ஏதோ ஒரு போக்கில் தயாராக வைத்திருந்தேன் அப்பா! இப்போது அது உபயோகப்படுவது எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா?'' என்றாள். ரமா ஆரத்தி எடுத்தானதும் வாசலிலிருந்து உள்ளே வந்து சேர்ந்தாள்.

காந்தியும் கோசல்ராமும் அவளைத் தொடர்ந்து உள்ளே வந்தனர். வாசு காருக்குச் சென்று கையோடு பூச்சரம் ஒன்றை எடுத்துக் கொண்டான்.

'ரமா பார்க்கும்போதே காந்தியின் தலையில் அதை அன்பு காட்டி வைக்கப் போகிறேன். 'நான் மாய்ந்துவிடவில்லை. குதூகலமாகத்தான் இருக்கிறேன்' எனக் காட்டப் போகிறேன். அதைப் பார்த்து ரமாவின் முகம் தொங்கி விடும்...'

நாடக ஒத்திகையைத் தனக்குள்ளே நடத்திக் கொண்டு வாசு மெள்ள அவர்கள் இருக்குமிடம் வந்தான்.

ரமா அப்போதுதான் காந்தியிடம், ''காந்தி! உன் விருப்பம் ஈடேறிவிட்டதில் எனக்கு எவ்வளவு குதூகலம் தெரியுமா? என்றென்றும் மலர் மணத்துடன் நீ இன்புற்று வாழ வேண்டும். இதுவே என் ஆசிகள்'' என்று கூறிக் கொண்டிருந்தாள்.

ரமா காந்தியை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். பெயருக்கேற்றபடி இவள் முகத்தில் எவ்வளவு காந்தி! எவ்வளவு மலர்ச்சி! திருமணத்தின் இன்பப் பொருளை இவளிடம் நன்றாகக் காண முடிகிறது... காந்தி முகத்தில் செம்மை படரச் சகோதரியின் அருகில் அமர்ந்திருந்தாள்.

அதே நேரத்தில் வாசு உள்ளே வந்தான். ரமா எழுந்திருந்து அவனை வரவேற்றாள். ''வாருங்கள் வாசு, உட்காருங்கள்.''

ஆனால் வாசு...

அப்படியே தயங்கி நின்று விட்டான். அவன் கண்கள் குத்திட்ட பார்வையில் நிலைத்து விட்டன.

'இவள் ரமாவா? அவனோடு ஸ்கூட்டரில் பின்னால் அமர்ந்து இன்பகீதம் பாடிய ரமாவா? அங்கங்கள் ஒவ்வொன்றும் பருவப் பொழிலை எடுத்துக் காட்ட மலர் முகம் விரித்து மயக்கிய ரமாவா? கண் வீச்சிலும், நாணப் புன்னகையிலும் அவனை வசப்படுத்திய ரமாவா? ஆதவனைக் கண்டதுமே விரியும் செந்தாமரை போல் அவனைக் கண்டதும் முகம் மலர்ந்த ரமாவா?' அவனால் நம்பவே முடியவில்லை. **(தொடரும்)**




## சுமதி சொல்லுகிறள்:

"போயும் போயும் இவருக்கு இந்த வயதில் ஏன் இப்படிப் புத்தி போயிற்று?"

"பெண்ணுக்குக் கல்யாணம் செய்து வைத்தார். கல்லூரியில் பிள்ளையைச் சேர்த்தார். உடனே தமக்கு ஒரு சௌகரியம் தேடிக் கொண்டு விட்டார். இந்தச் சபலம் யாரை விட்டது?"

"சமையலுக்கு ஆள் போட்டுக் கொள்ளப் போகிறேன் என்று அவர் சொன்னபோதே எனக்கு அந்த யோசனை அவ்வளவாகப் பிடிக்கவில்லை. கடைசியில் நான் சந்தேகப்பட்டது உண்மையாகி விட்டது. சமையல் வேலைக்கு வந்த பெண்ணையே மனைவியாக்கிக் கொண்டு விட்டார்!"

"இதற்காகத்தான் மனிதன் பெண் கல்யாணத்துக்கு அவசரப்பட்டானபோலிருக்கிறது!"

"சீ! வெட்கம் கெட்ட மனிதன். எதற்கும் ஒரு முறையில்லையா என்ன?"

"இந்தப் பெண் அவ்வளவு அக்கறையாக வேலைக்குப் போக ஆரம்பித்த போதே நான் சந்தேகப்பட்டேன். அவருக்கோ மனைவி இல்லை; இவளுக்கோ கல்யாணம் ஆகிற வழியாயில்லை. அந்த மனுஷனைச் சிக்கட்டி விட்டாள்...."

"......புளியங் கொம்பாகப் பார்த்துத்தான் பிடித்திருக்கிறள். அவருக்கு வசதியான வருமானம்; சொந்த வீடு; இனிமேல் இவள் ராஜ்யம்தான்!"

இவைகளெல்லாம் என் காதில் விழுந்தவை. என் காதுக்குக் கேளாமல் எத்தனை பேர் என்னவெல்லாம் பேசுகிறார்களோ!

எத்தனையோ பேரைக் கட்டிப் பிடித்துப் புழுதியில் புரட்டி எடுத்த ஊர் வாய் ரகுநாதனையும் விட்டு வைக்கவில்லை. என்னையும் சும்மா விடவில்லை. சேற்றை வாரிப் பூசிற்று எங்கள் இருவர் மீதும். ஆனாலும் நான் அந்த ஊர் வம்பை வாழ்த்துகிறேன்! "வம்பே நீ வாழ்க!" என்கிறேன். என்ன, ஆச்சரியமாக இருக்கிறதா?





## ரகுநாதன் சொல்லுகிறார்:

ஊராரின் பேச்சுக்களில் உண்மை இல்லாமல் இல்லை. நான் சுமதியை இரண்டாந் தாரமாக மணந்து கொண்டது உண்மை. அதுவும் என் நாற்பத்தைந்தாவது வயதில் திடீர் என்று இந்த விவாகம் நடந்தது. என் முப்பத்திரண்டாவது வயதில் என் மனைவி இறந்துவிட்டாள். அவள் தன் நினைவுச் சின்னங்களாக ஒரு பெண்ணையும், பிள்ளையையும் வைத்து விட்டுப் போயிரா விட்டால் என் போக்கே வேறு திசை மாறியிருக்கும்.

எனக்குச் சொந்தம் என்று சொல்லிக் கொள்ள ஒரு வீடு இருக்கிறது. சௌகரிய

மான மாத வருமானம். ஒரு பெரிய கம்பெனியின் சட்ட ஆலோசகனாக இருக்கிறேன். காரும் இருக்கிறது.

பெண் சந்திரா மூத்தவள்; அவள் உருவத்தில் அப்படியே அவளுடைய தாயாரை உரித்து வைத்திருந்தது. அவளைப் பட்டதாரியாக்கி நல்ல இடத்தில் விவாகம் செய்து கொடுத்தேன். பையன் — மோகன் — சந்திராவைவிட ஆறு வயது சின்னவன். அவனையும் கல்லூரியில் சேர்த்து விட்டேன்.

ஏழெட்டு வருஷங்களாகச் சந்திராதான் வீட்டில் சமையல். என் மனைவி இறந்ததும், என் பந்துக்கள் பலரையும் அழைத்து வந்து வீட்டை நிர்வகித்தேன். ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை. பந்துக்கள் அவரவர்கள் காரியமாக வந்து என் வீட்டில் தங்கிச் சமைத்துப் போட்டுக் கொண்டிருந்தனர். அவர்கள் காரியம் முடிந்ததும் ஏதாவது சாக்குச் சொல்லிக் கொண்டு ஊருக்குப் போகலாயினர். அப்பொழுதுதான் ஒரு மனைவியினுடைய அருமை எனக்குத் தெரிய வந்தது. அவள் இருந்தவரையில் வீட்டில் எல்லாமே நிறைந்திருந்தது. ''இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றில்லை...'' என்பது எவ்வளவு பெரிய உண்மை!

எல்லாத் துன்பங்களையும் சந்திராவுக்கு வயது பதினைந்தாகிறவரையில் சகிக்க வேண்டி

தைப் பற்றிய நினைவும், எனது ஆதரவற்ற நிலையும் நினைவுக்கு வந்தன.

நண்பர்கள் சிலருடைய யோசனையின்படி சமையலுக்கு யாரையாவது நியமிப்பது என்ற முடிவுக்கு வந்து தகுந்த நபரைத் தேடிக் கொண்டிருந்தபோதுதான் சுமதி வந்தாள், எங்கள் வீட்டுக்கு வரும் சாஸ்திரிகளின் சிபாரிசோடு.

''என் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுப் போர்ஷனில் இருக்கிறாள். பரம ஏழைக் குடும்பம். ஐந்து பெண்களுக்கு இடையில் பிறந்தவள். தரித்திர நிலையில் இருக்கும் இவள் தகப்பனார் அரும் பாடு பட்டு மூத்த பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணிவிட்டார். இரண்டாவது பெண் தானாக வரனைத் தேடிக் கொண்டு விட்டது. இவள் திவ்வியமாகச் சமைப்பாள். இவளுக்கு உதவி செய்வது ஒரு குடும்பத்தையே காப்பாற்றுவது போலாகும்'' என்று சாஸ்திரிகள் என்னிடம் சொன்ன போது சாஸ்திரிகளுக்குப் பின்னால் சுமார் பதினைந்தடி தூரத்தில் தூணில் சாய்ந்து கொண்டு நின்ற அந்தச் சோக சித்திரத்தைப் பார்த்தேன். அப்பப்பா! அவள் கண்களில்தான் எவ்வளவு சோகம்! 'என்னை நிராகரித்து விடாதீர்கள்' என்று அவள் பார்வை தீனமாக என்னைக் கெஞ்சியது.



வந்தது. அவள் மிகவும் சூட்சும அறிவு பெற்றவள். விரைவில் சமைக்கக் கற்றுக் கொண்டு விட்டாள். பள்ளிப் படிப்போடு அவள் சமையலையும் கற்றுக் கொண்டது எனக்கு மிகவும் சௌகரியமாய்ப் போய் விட்டது. சுவையான வீட்டுச் சாப்பாடு கிடைத்தது. கல்லூரியில் அவளைச் சேர்த்த பிறகு அவள் திறமை அதிகமாகி விட்டது. ஒரு 'அயிட்ட'த்தைக் கூட விட்டு விடாமல் காலை 8-30 மணிக்குள் சமையலை முடித்து விடுவாள்.

சந்திராவின் கல்யாணம் திடீரென்று நிச்சயமாகி விட்டது. அவள் அழகையும், புத்திசாலித்தனத்தையும் பட்டப் படிப்பையும் கண்டு நான் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்ததுபோல் உண்மையிலேயே ஒருவன் கொத்திக்கொண்டு போகத் தயாராகி விட்டான்; வரன் திருப்தியளிக்கும் விதத்தில் இருக்கவே நான் சம்மதித்து விட்டேன். கல்யாணம் ஆன கையோடு — மாப்பிள்ளை சந்திராவை டில்லிக்கு அழைத்துக் கொண்டு போய்விட்டான்.

ஜி. டி. எக்ஸ்பிரஸில் சந்திராவுக்கும் அவள் கணவனுக்கும் 'டாட்டா' சொல்லி விட்டு வந்த பிறகுதான் எனக்குக் குடும்பத்

''நாளையிலிருந்தே வந்துவிடலாம்....'' என்று அந்தப் பார்வையின் பரிதாப உணர்வுக்குக் கட்டுப்பட்டு என்னையும் அறியாமல் சொல்லிவிட்டேன்.

மறுநாள் அதிகாலையிலிருந்தே சுமதி வேலைக்கு வர ஆரம்பித்து விட்டாள்.

சுமதி வந்ததிலிருந்து எங்கள் வீடே ஒளி பெற்றுத் திகழ்ந்தது. சமையல் வேலையோடு அவள் நிறுத்திக் கொள்ளவில்லை; வீட்டைத் துப்புரவாக வைத்துக் கொள்வதிலும் அவள் அதிக அக்கறை காட்டினாள்.

அவள் வந்ததும் வராததுமாக ஏற்றுக் கொண்ட முதல் பொறுப்பு அதிகாலையில் புட்டிப் பாலை வாங்குவது. அதில் என்னைவிட மோகனுக்குத்தான் அதிக நிம்மதி. இல்லை என்றால் அவனல்லவா ஒருநாளைப் போல் விடியற்காலையில் எழுந்து பால் வாங்கப் போக வேண்டும்?

சுமதி ஒரு நாள் தாமதமாக வந்தாள் என்பதே கிடையாது. இவ்வளவு கடமை உணர்ச்சியுள்ள ஒரு சமையற்காரியைச் சரித்திரத்திலேயே யாரும் கண்டிருக்க மாட்டார்கள். அதிகாலையில் வரும்போதே பால் புட்டிகளை வாங்கி வந்து விடுவாள். அவள் வந்த சில நிமிஷங்களுக்கெல்லாம் கம்மென்று

காப்பியின் நறுமணம் கமழும். அதுவே எனக்கு விழிப்பையும் அலாதி சுறுசுறுப்பையும் கொடுத்து ஊக்கிவிடும்.

என் சோம்பேறித்தனத்தை நன்றாய்ப் புரிந்து கொண்டிருந்த அவள் கொஞ்சம் கொஞ்சமாக, வீட்டுக்குத் தேவையான மளிகைச் சாமான்களை வாங்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டுவிட்டாள். மார்க்கெட்டுக்குப் போய்க் காய்கறிகளையும் அவளே வாங்கி வரலானாள். இது மேலும் என்னைச் சோம்பேறியாக்கி விட்டது.

சுமதிக்குச் சுமார் முப்பத்தைந்து வயதிருக்கும். நிறம் கறுப்பென்று சொல்ல முடியாது என்றாலும் சிவப்பும் இல்லை. மாநிறம். வறுமையையும் மீறி வாளிப்பாய் வளர்ந்திருந்தாள் — வேலியை மீறி வளரும் பூங்கொடியைப்போல. செயற்கைச் சாதனங்கள் ஏதும் இன்றிப் பனியில் குளித்த புது மலராய், வனதேவதை மாதிரி இயற்கை எழில் நிறைந்து விளங்கினாள். அவள் வருகையை எந்த ஒலியினாலும் தெரிந்து கொள்ள முடியாது. வந்த பிறகும் அவள் குரல் காரணமின்றிக் கேளாது. அதுவும் மெதுவாகத்தான் கேட்கும். தெய்வ சந்நிதியில் ஏற்றி வைத்த குத்து விளக்குமாதிரி மிகவும் அடக்கமாகத் தன்னுள் தானே ஒளி பரப்பிக் கொண்டு வீடு முழுவதும் சாந்நித்தியமாக விளங்கினாள்; வனத்தில் யாரும் அறியாமல் பூத்துத் தன் மணத்தைப் பரப்பும் மல்லிகையைப் போல் இருந்தாள்.

சுமதியைப் பற்றி நான் இப்படி யெல்லாம் சொல்லுவதைப் பார்த்து எனக்கு ஏதாவது அவளிடம் சபலமோ என்று யாராவது ஐயப்பட்டால் அது பெருந் தவறாகும். அவள் வந்து மூன்று மாதங்களுக்கு மேல் ஆகியும் ஒரு நாள்கூட அவளை நான் நிமிர்ந்து பார்த்ததில்லை.

வாழ்க்கையில் எந்த நிகழ்ச்சியையும் கண்டு நான் அதிர்ச்சியடைந்ததில்லை; எதையும் 'லைட்'டாக எடுத்துக் கொண்டு ஒரு மாதிரி சஞ்சலப்படாமல் சமாளித்து விடுவேன். நடுத்தர வயதில் என் மனைவி இறந்ததையே நான் 'இது ஈசுவர நியதி' என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அதைப் பற்றி யாரிடமும் கூறி அங்கலாய்க்காமல் இருந்துவிட்டவனாயிற்றே!

சுமதியை நான் மணந்துகொள்ளும் அளவுக்கு உருவாகிவிட்ட நிர்ப்பந்தத்தை நினைக்கும்போது 'இது ஈசுவர நியதி' என்றுதான் நினைக்க வேண்டியிருக்கிறது. மறு விவாகம் செய்துகொள்ளும் விதி எனக்கு இருந்திருக்கிறது. அதுதான் இந்த நிர்ப்பந்தமான சூழ்நிலையை உருவாக்கிவிட்டிருக்கிறது என்றுதான் கூறவேண்டும்.

அத்துடன் இன்னொரு உண்மையையும் ஒப்புக் கொண்டாக வேண்டும். சுமதி இல்லாமல் இனி வாழ முடியாது என்ற நிலைமை தானாகவே உருவாகி விட்டது. அவள் என் குடும்பப் பொறுப்பு முழுவதையும் ஏற்றுக் கொண்டு ஆறு மாத காலமாக என்னைச் சுகபுருஷனாக வளர்த்து விட்டாள். சுமதி இப்படிச் சமையற்காரியாகவே வாழ்நாள் முழுவதும் இருக்க முடியுமா என்பது பற்றி நான் சிந்தித்ததே இல்லை. வேளை தவறாமல் அவள் செய்த அன்பான உபசரணைகளில் என்னை நானே இழந்து விட்டேன்.

## சுமதி சொல்கிறாள்:

இதை நிர்ப்பந்தமான சூழ்நிலை என்று சொல்ல நான் தயாராயில்லை. விதியின் விளையாட்டு என்றும் சொல்ல மாட்டேன். என் வாழ்வுக்கு வழி வகுத்துத் தந்த அந்தச் சந்நிதியை விதி என்ற பெயரால் நான் தூற்றினால் அது எனக்கு மகா பாவம்! என்னையும் அவரையும் 'இந்த வயதில்' கணவன் மனைவியாகச் சேர்த்து வைத்தது ஊர் ஜனங்களின் வம்புப் பேச்சுக்கள்தான். 'யார் எப்படிப் போனால் நமக்கென்ன?' என்று அவர்கள் பாட்டுக்குத் தங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டிருந்திருந்தால் என் அவல வாழ்வுக்கு விடிவு ஏற்பட்டிருக்காது என்பது உண்மை. அவர்....பாவம்! எப்படிப்பட்ட உத்தமர்! வயது நாற்பதுக்கு மேல் ஆகியும் கட்டுத் தளராத மேனி, கபடம் இல்லாத பார்வை, பெண்களைக் கண்டு விட்டால் வைத்த கண் வாங்காமல், 'அச்சப் பிச்' என்று பார்க்கும் வயதில்—(அதுவும் மனைவியில்லாதவர்) அவர் என்னிடம் ரொம்பக் கௌரவமாக நடந்து கொண்ட பெருந்தன்மை என் உள்ளத்தில் படிந்து விட்டது. அவர் வீட்டுக்குச் சமையற்காரியாக இருந்த எனக்கு அவர் அளித்து வந்த மதிப்பு என்னை எவ்வளவோ உயர்த்தி விட்டது.

எனக்கு அவரிடத்தில் ஏற்பட்டிருந்த பிடிப்பை, மதிப்பு என்பதா, விசுவாசம் என்பதா, பாசம் என்பதா, அன்பு என்பதா, பக்தி என்பதா என்று எனக்கே சரியாகச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் ஒன்றுமட்டும் உறுதி. அவரை விட்டு நான் விலகக் கூடாது என்னும் உறுதியான எண்ணம் எப்படியோ என்னுள் ஏற்பட்டுவிட்டது. ஒரு நாள் கூட நான் அவர் வீட்டுக்குப் போகாமல் இருந்ததில்லை. நான் அவர் வீட்டுக்கு வேலைக்குப் போக ஆரம்பித்ததிலிருந்து, எங்கள் குடும்பம் சுபிட்சத்துக்கு வந்திருந்தது. என் ஒருத்தியின் சாப்பாடு, காப்பியாவும் அங்கேயே கிடைத்து வந்ததோடு கணிசமான சம்பளமும் கிடைத்து வந்ததே! அப்பாவுக்கு ரொம்ப சந்தோஷம். ''இப்பத்தான் குழந்தையின் முகத்தில் களை வந்திருக்கிறது!'' என்பார். (நான் எப்போதும் அவருக்குக் குழந்தைதானே!)

அம்மாவுக்கு மாத்திரம் அவ்வளவு திருப்தியில்லை. ''என்னவோ போ! காலா காலத்தில் ஒரு கல்யாணத்தைச் செய்து வைக்காமல் இப்படி இன்னொருத்தர் வீட்டில் போய் அடுப்படியில் வெந்து உழைக்க வேண்டியிருக்கிறதே!'' என்று ஓயாமல் அங்கலாய்த்துக்கொள்ளுவாள். ''அம்மா, அடுப்படியில் வேகும் வேலையே அங்கு கிடையாது. காஸ் அடுப்பு; காற்றோட்டமான சமையலறை. இதுவும் போதாக் குறைக்கு மின்சார அடுப்பும் இருக்கிறது. வெந்நீர் போட்டுக் கொள்ள நான் தினம் அதைத்தான் உபயோகிக்கிறேன்!'' என்று எத்தனை தடவை

சொன்னாலும் அம்மா அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை.

ஒரு நாள் அம்மா என்னிடம் பரபரப்புடன் ஓடி வந்தாள். "சுமதி, நீ நாளையிலிருந்து சமையல் வேலைக்குப் போக வேண்டாம். இன்னைக்குச் சாயந்திரமே அவரிடம் போய்ச் சொல்லிவிட்டு வந்துவிடு..." என்று படபடப்போடு கொட்டித் தீர்த்துவிட்டாள்.

நான் அப்பொழுதுதான் வேலைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

"என்ன அம்மா இது. இடீரென்று இப்படிச் சொல்லுகிறாய்? உனக்கு என்ன வந்து விட்டது?" என்று அதிர்ந்து போய்க் கேட்டேன்.

"எனக்கு ஒன்றும் வரவில்லை. உனக்குத் தான் பேரிடியாக வந்திருக்கிறது!"

"என்னம்மா இது? புதிர் போடுகிறாய்! கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லேன்!" என்று ஒரே குழப்பத்துடன் கேட்டேன்.

"விவரம் என்னடி வேண்டிக் கிடக்கிறது? நான் அதற்குத்தான் அப்பவே முட்டிக் கிண்டேன். உங்கப்பா கேட்கவில்லே."

அம்மாவின் குரல் அப்படி ஆத்திரமாக ஒலித்து நான் கேட்டதேயில்லை.

அதற்குள் அப்பாவும் வந்துவிட்டார். நான் இதுதான் நல்ல சமயம் என்று வெளியே நழுவிவிட்டேன்.

நான் வேலை முடிந்து வந்துவிட்டது தெரியாமல் அம்மாவும் அப்பாவும் பேசிக் கொண்டிருந்தார்கள். பேச்சு என்னைப் பற்றியதாயிருக்கவே என்னால் ஒட்டுக் கேட்காமல் இருக்க முடியவில்லை.

"வெளியே தலை காட்ட முடியவில்லை. நான் வெளியே போற இடங்களிலெல்லாம் இவளைப் பற்றிய பேச்சுத்தான். அவர் ரொம்ப நல்லவரா யிருக்கலாம். நான் இல்லேன்னு சொல்லல்லே. நம்ம பொண்ணும் நல்லவதான். இருந்தாலும் ஊராரெல்லாம் இரண்டு பேரையும் சேர்த்துப் பேசறதைக் கேட்டால் நெருப்பை அள்ளிக் கொட்டறாப் போல இருக்கு. அவளை அங்கே வேலைக்கு அனுப்பற போதே மடியில் நெருப்பைக் கட்டிண்டுதான் அனுப்பினேன்."

"ஊரார் பேச்சைக் கேட்டுண்டு வாய்க்கு வந்ததைப் பேசாதே. உனக்கு இஷ்டமில்லை என்று சொல்லு. நம்ம சாஸ்திரிகளிடம் பக்குவமாய்ச் சொல்லிச் சுமதி வேலைக்குப் போவதை நிறுத்துவோம். நீ சுமதியிடம் என் வந்ததையாவது சொல்லி வைக்காதே. அவள் வரும் நேரம்தான்..."

அப்பாவுக்குத்தான் என்மீது எவ்வளவு ஆசை; எவ்வளவு நம்பிக்கை! அம்மாவுக்கு மட்டும் என்ன? ஆசை இல்லையா? பாசம் இல்லையா? என்ன இருந்தாலும் பெண்ணல்லவா அவள்? ஏதாவது என்மீது அபவாதம் வந்துவிடப் போகிறதே என்னும் கவலைதான் அவளுக்கு.

அப்பாவும் அம்மாவும் பேசிக் கொண்டிருந்ததை நான் கேட்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. பிறகு அம்மாவும் அதைப் பற்றி எதுவும் என்னிடம் சொல்லவில்லை. வழக்கம்போல் நான் அவர் வீட்டுக்குப் போய் என் வேலையைச் செய்து வந்தேன். ஆனாலும் என் மனம் மட்டும் சரியாயில்லை.

### ரகுநாதன் சொல்லுகிறார் :

இதுவரை எந்த விதமாகவும் படியாமல் இருந்த என் மனத்தில் சுமதி விஷயமாக மாசு படியத் தொடங்கியது. அதுவும் சாஸ்திரிகள் வந்து பேசிவிட்டுப் போன பின், என் உள்ளத்தில் ஆட்டம் கண்டுவிட்டது.

"ஏன் சாஸ்திரிகளே, இப்படிச் செய்தால் என்ன? ஒரு சுமாரான வரனாயிருந்தாலும் பரவாயில்லை என்று யாரையாவது பார்த்துச் சொல்லுங்களேன். அவள் கல்யாணத்துக்கு ஆகும் செலவை நான் ஏற்றுக் கொள்கிறேன். என் பொருட்டு அவள் எந்தவித அபவாதத்தையும் ஏற்கக்கூடாது. ஏற்கவும் விடமாட்டேன்" என்று சொன்னேன்.

அதற்கு அவர் "ஸார், கொஞ்சம் யோசிச்சுப் பதில் சொல்லணும். சுமதி ஏழைங்கறதி னாலே மாத்திரம் முன்னெல்லாம் அவளுக்கு வரன் கிடைக்காமலே இருந்தது. இப்போ

## இருவர் உள்ளம்

அட்டைப் படக் கவிதை

*இவள் :*

நிழலில் இருப்பவர்
நினைப்பென்னவோ — வெயில்
தழலென நிற்கிறேன் :
தவிப்பில்லையோ ?

*அவன் :*

வெயிலில் காய்கிறான் :
வெறுப் பென்னவோ — அவன்
ஒயிலிலே சொக்கினேன்:
ஒப் பில்லையோ ?

*இவள் :*

தன்மை இல்லாத
தனவான் இவர் — அரும்
பெண்மை அறிந்து
பேணுர் இவர்.

*அவன் :*

பான்மை மிகுந்த
பாவை இவள் — பேர்
ஆண்மை சிறக்க
அமைவாள் இவள்.

*இவள் :*

காட்டு வழியிலோர்
கள்வன் இவர் — கை
நீட்டி மதிக்கவே
நினைப்பார் இவர்.

*அவன்:*

காற்று வெளியிலோர்
கனவே இவள் — கண்
காட்டி அழைக்கையில்
கலைவாள் இவள் !



எழுதியவர்: 'லெமன்'

இன்னொரு அபவாதம் அவளைச் சூழ்ந்துண்டு நிக்கறது....'' என்றார்.

எனக்கு ஒரே அதிர்ச்சியாயிருந்தது. ''அபவாதமா? அது என்ன சாஸ்திரிகளே !'' என்று கலவரத்துடன் கேட்டேன்.

''உங்காத்துக்கு அவள் வேலைக்கு வரறதான் அபவாதம். தெரிந்ததா?''

''இதில் அபவாதத்துக்கு என்ன இருக்கிறது?''

''நீங்கள் ரொம்ப நல்லவர். பெரிய மனிதர். ஆனால் உங்காத்திலே பெண்டுகள் யாருமே இல்லை. அதுதான் சுமதியின் மேல் அபவாதமாகச் சுமந்து விட்டது.''

எனக்குத் தலையைச் சுற்றியது. அடடா! இதுதான் அபவாதத்துக்குக் காரணமா?

''சாஸ்திரிகளே, நான் இப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்? விளக்கமாகச் சொல்லுங்கள்.''

''நீங்களாகவே புரிந்து கொள்ளுவீர்கள் என்று பார்த்தேன். சரி, வெளிப்படையாகவே சொல்லி விடுகிறேன். சுமதியை நீங்கள் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும். அதுதான் சரியான யோசனை....'' என்றார் சாஸ்திரிகள்.

''என்ன, நானா...? சுமதியையா ? கல்யாணம் பண்ணிக் கொள்ளணுமா?'' என்று அதிர்ந்து போய்க் கேட்டேன்.

''அதிர்ச்சி அடையறதுக்கு இதிலே என்ன இருக்கு ?'' என்றார் சாஸ்திரிகள்.

''சாஸ்திரிகளே, இது விஷயமாகச் சட்டென்று ஒரு முடிவுக்கு வந்துவிட முடியுமா? முதலில் சுமதியின் சம்மதம் தெரியவேண்டும். அப்புறம் அவள் தாயார், தகப்பனார் சம்மதம் தெரிய வேண்டும்....''

உடனே சாஸ்திரிகள் மிகவும் நிதானமான குரலில், ''அவாளெல்லாம் அந்தண்டையே இருக்கா. இப்பவே அவாளையும் கலந்துண்டு பேசிப்பிடலாம்....'' என்றார்.

அடுத்த நிமிஷம் சுமதியின் தாயாரும் தகப்பனாரும் உள்ளே வந்தார்கள். அவர்கள் பின்னாலேயே சுமதியும் வந்தாள். எல்லாம் நாடகம் மாதிரி நிகழ்ந்தது.

## சுமதி சொல்லுகிறாள் :

என்ன செய்கிறோம் என்று தெரியாமலே அவர் எதிரில் போய் நின்றேன்.

''சுமதி, நன்றாக யோசித்துப் பார்த்துத்தான் இந்த முடிவுக்கு வந்தாயா? ஊரார் என்னத்தையோ சொன்னார்களென்று பலவீனமான காரணத்தை வைத்துக் கொண்டு இந்தக் கல்யாணத்துக்கு நீ சம்மதித்து விட்டாயா?''

அவர் முகத்தை அன்றுதான் நான் நேருக்கு நேராக நிமிர்ந்து பார்த்தேன். அவர் முகத்தில் விரக்தியும், நிராசையும், சாந்தமும் குடிகொண்டிருந்தன. இவைகளுக்கெல்லாம் மேலாக முதிர்ந்த ஆண்மையின் கம்பீரமும் ததும்பியது. அதைக் கண்டதும் விழித்துக் கொண்ட என் பெண்மை அவரைப் பதிலளிக்கத் தூண்டியது.

''எந்த நிர்ப்பந்தமும் என்னைப் பணிய வைத்திருக்க முடியாது. நானாக, என் மனப்பூர்வமாகத்தான் இந்த முடிவை ஏற்றேன்.''

''நான் ஒரு பெற்றோன். இரு குழந்தைகளுக்குத் தந்தை !''

''எல்லோரும் ஒரு நாளைக்குப் பெற்றோர்களாக வேண்டியவர்கள்தானே ?''

''....என் வயது நாற்பத்தைந்து.''

''எனக்கும் வயது முப்பத்தைந்தாகிறது.''

''நான் இந்தத் திருமணத்துக்குச் சம்மதிப்பேன் என்று எப்படி எதிர்பார்த்தாய்?''

''யாசகம் கேட்க வருபவர்கள் எதையும் எதிர்பார்த்துத்தானே ஒருவரை நாட வேண்டும் ?''

''எதிர்பார்த்தது கிடைக்காவிட்டால்?''

''என்றும் நம்பிக்கை வீண் போவதில்லை.''

''அந்த நம்பிக்கைக்கு ஆதாரம்?''

''உங்களுடைய நல்ல மனசு!''

'' அது நல்லதா, இல்லையா என்பதை நானே அறியாத போது நீ மட்டும் எப்படி அறிய முடியும் ?''

''மல்லிகையின் நறுமணம் அம்மலருக்குத் தெரிவதில்லை. அதை இன்னொருவர் மட்டுமே நுகர முடியும்.''

''சரி. அந்த நல்ல மனசு உன் பக்கம் தானே திரும்பி விடும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் எழுந்த முடிவா இது?''

''உண்மையான அன்புடன் தெய்வத்தை வழிபடுகிறவர்கள் தங்கள் இதயத்தைத்தான் தெய்வத்துக்குக் காணிக்கையாக்குவார்களேயொழிய, தெய்வத்திடம் பதிலுக்கு எதையும் கோர மாட்டார்கள்.''

''நான் தெய்வமல்ல, சுமதி. வெறும் மனிதன்தான் !''

''மானிடர்கள் தெய்வத்தை மனித உருவில் கண்டுதானே வழிபட முடியும்?''

''வாழ்க்கை வாழ்வதற்கேதான். வழிபாட்டுக்குரியதல்ல.''

''தெய்வ வழிபாட்டிலேயே வாழ்க்கை இன்பத்தைக் காண முடியுமே !''

''அது மிகவும் உயர்ந்த நிலை. அந்தப் பக்குவம் உனக்குக் கிட்டிவிட்டதாக எண்ணி உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளாதே !''

'' திடமான மனசுடன் தெய்வத்தை அடைந்து விட்டால் அதன் சந்நிதியில் ஏமாற்றத்துக்கு இடம் ஏது ?''

''சுமதி, நீ வென்று விட்டாய் !''

ஒரு நல்ல நாளில் வடபழனி ஆண்டவன் சந்நிதியில் எங்கள் திருமணம் மிகவும் எளிய முறையில் நடந்தேறியது.

* * *

இப்போது நீங்களே சொல்லுங்கள், ஊர் வம்பு எங்கள் விஷயத்தில் உதவியிருக்கிறதா இல்லையா? நாலு பேர் நாலுவிதமாக வம்பு வளர்க்காமல் அவரவர் தத்தம் காரியத்தைப் பார்த்துக் கொண்டு போயிருந்தால் எனக்கோ அல்லது அவருக்கோ மனம் விட்டுப் பேச வேண்டிய நிர்ப்பந்தமோ அல்லது அதற்கான தைரியமோ ஏற்பட்டே இருக்காது. இருவருமே அவரவர் எண்ணத்தை, விருப்பத்தை வெளியிடப் பயந்து மனத்துக்குள்ளேயே வைத்துப் பூட்டியிருப்போம்.

அதனால்தான் சொல்கிறேன், வம்பு வளர்க ! இல்லாததையும் பொல்லாததையும் கண்ணும் காதும் வைத்துப் பேசும் வழக்கம் வாழ்க !

# ஆறு கைகள் இருந்தாலும் போறாது போலிருக்கே!

## ஒரு Prestige பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் வாங்கிவிடுங்கள்!



### பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் உங்கள் பொன்னான சமையல் நேரத்தில் ஒருமணி மிச்சமாக்குகிறது

சமையல் பிரச்சனையை எளிதாக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர். பிரஸ்டிஜ் சமையல் வழக்கமான சமையலுக்காகும் நேரத்தில் கால்பங்கு நேரத்திலே தயார். அது எளிதானது. அத்துடன் பத்திரமானதும்கூட. 12 வயது சிறுமிகூட கையாளலாம். எரிபொருள் செலவில் எத்தனையோ மிச்சம். பிரஸ்டிஜ் இருந்துவிட்டால் சமைக்கும்போது குழப்பமோ, தடுமாற்றமோ இருக்காது. ஏனெனில் அதில் ஒரே சமயத்தில் மூன்றுவகை சமைக்கலாம். பிரஸ்டிஜில் தயாரான உணவில் சத்து, ருசி, மணம் முதலியவை குறைவதில்லை. பிரஸ்டிஜ் ஆயுட்கால உத்தரவாதம் கொண்டது. நாடெங்கும் விற்பனைக்குப் பின்பும் பராமரிப்புக்கு வசதி யுள்ள பிரஷர்குக்கர் பிரஸ்டிஜ் ஒன்றே.

பிரஸ்டிஜ் ஐந்து அளவுகளில் உள்ளன. உங்கள் குடும்பத்திற்கு தேவையான அளவை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.

பெயர்கள் வேறானாலும் ப்ரீத்.* பிரஸ்டிஜ் இரண்டும் ஒன்றே. இந்தியாவில் பிரஸ்டிஜ், ஏற்றுமதிக்கு ப்ரீத்.

புகழ்பெற்ற ப்ரீத் ஸ்டிம் இட், ஸ்கில்லெட், ஸாஸ்பான் - சமையல் விரைவாகவும் எளிதாகவும் முடிய இவைகள் உதவுகின்றன.

டிடி (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர்-16.

TTP-5799

Bensons/2888/17A.M

# உங்களுக்கு சுவையுள்ள, கெட்டியான, ஸ்ட்ராங்கான மற்றும் உடனே தயாராகும் காபி வேண்டுமா...

இதோ **ப்ரூ** இருக்கிறது




கெட்டியான,
ஸ்ட்ராங்கான
காபி-சிக்கரி கலவைதான் ப்ரூ.
உடனடியாக தயாராகிவிடுகிறது!
புத்துணர்ச்சியளிக்கும்
மிகச் சிறந்த பானம்.

**ப்ரூக் பாண்ட்**

**ப்ரூ** இன்ஸ்டண்ட்

காபி சிக்கரி ப்லென்ட்

# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 30

உள்ளத் தூய்மையோடு அனுசரிக்கப்பட்ட உபவாச விரதம் உடல், மனம், ஆன்மா மூன்றையும் சுத்தமாக்கும். உபவாசமானது ஊனை வருத்தி ஆன்மாவுக்கு அந்த அளவுக்கு விடுதலை தரும். உள்ளத்தைச் செலுத்திச் செய்யப்பட்ட பிரார்த்தனையில் அற்புத பலன்களைக் காணலாம். மாசு நீங்கி சுத்த நிலை அடைவதற்கு உள்ளம் ஆசைப்படுவதே பிரார்த்தனை. அடக்க முடியாத ஆசையாக இருக்க வேண்டும். உள்ளத்தில் சுத்தம் ஏற்பட்டு அது ஒரு மேன்மையான காரியத்துக்காகப் பயன்பட்டால் அது ஒரு பெரிய வெற்றியாகும். நோயில் வருந்தும் ஒருவனுக்கு ஆரோக்கியம் உண்டாவதற்காக காயத்ரி ஜபம் செய்யலாம். நாடும் மக்களும் சமூகமும் பெரும் கஷ்டங்களில் சிக்கி வருந்தும் போது, அடக்கத்துடனும் ஒருப்பட்ட மனத்துடனும் காயத்ரி ஜபம் செய்தால் அபாயங்களினின்றும் விபத்துக்களினின்றும் தப்பலாம். காயத்ரி ஜபம் செய்வதும் இஸ்லாமியர்கள் 'நமாஸ்' செய்து தொழுவதும், கிறிஸ்தவர்கள் ஜபம் செய்வதும் மூடநம்பிக்கை, அவை பாமரர்களுக்குத்தான் தகுந்தவை என்று எண்ணுவது பெருந் தவறு. உபவாசமும் ஜபமும் உள்ளத் தூய்மை அடைவதற்குப் பெரும் சாதனங்கள். கடமைகளைச் சரிவரச் செய்வதற்கு அவற்றின் வழியடைந்த உள்ளத் தூய்மை மிகவும் பயன்படும். கடமைகளைச் செய்து நமது குறிக்கோளை அடையலாம். சில சமயம் விரதமும் ஜபமும் பயன் தராமல் போகலாம். அதற்குக் காரணம் நாம் அதைத் தூய முறையில் கையாளவில்லை என்பதே.

கிருஷ்ண ஜயந்தி அன்று அநேகம் பேர்கள் பகலில் உண்ணாமல் இருக்கிறார்கள். ஆனால் நாள் முழுதும் சீட்டாடுவார்கள். பணம் வைத்து ஆடுவார்கள். இத்தகைய உபவாசத்தால் உள்ளத் தூய்மை அடைய முடியுமா? முந்திய நிலையைவிடத் தாழ்ச்சியைத்தான் அடைவார்கள். உபவாசம் இருக்கும்பொழுது உள்ளத்தைத் தாக்கும் கெட்ட எண்ணங்களைத் தடுத்துக் கொள்ள வேண்டும். நல்ல கருத்துக்களுக்கும் சங்கற்பங்களுக்கும் மனத்தைத் திறந்து வைக்க வேண்டும். ஒரு வேண்டுதல் வேண்டிக் கொண்டால் அது நல்ல வேண்டுதலாக இருக்க வேண்டும். அந்தப் பிரார்த்தனையில் உள்ளத்தைச் செலுத்தி அதனுடன் ஒன்றித்துப் போக வேண்டும். ஜபமாலையைக் கையில் வைத்துக் கொண்டு விரல்களினால் மணிகளைத் தள்ளி நாக்கில் ஆண்டவன் பெயரைச் சொல்லி உள்ளம் இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருந்தால் பயன் இராது. (யங் இந்தியா 24-3-20)

சில உபவாசங்கள் பலாத்காரமேயாகும். சுயநலத்துக்காக மேற்கொள்ளும் உபவாசங்கள் இத்தகையவேயாகும். ஒருவனிடமிருந்து பண உதவி அடைவதற்காக உண்ணா விரதம் இருப்பது பலாத்காரமாகும். எந்த விதமான லாபத்தை ஒருவன் தனக்கென்று அடைவதற்காக எடுத்துக் கொள்ளப்படும் உபவாச விரதங்கள் எல்லாம் இதைப் போலவேயாகும். பலாத்காரம் செய்வதற்கும் அதற்கும் ஒன்றும் பேதமில்லை. அத்தகைய பலாத்காரத்துக்கு இசையாமல் தடுப்பதே நியாயம். இதைப் பற்றி எனக்குச் சந்தேகமே கிடையாது. அநேகம் பேர் என்னைப் பயமுறுத்தவே உபவாச விரதங்கள் ஆரம்பித்ததுண்டு. நான் அவற்றைப் பொருட்படுத்தாமல் தடுத்து வந்திருக்கிறேன். எது சுய நன்மைக்காகச் செய்யப்படும் உபவாசம், எது நல்ல நோக்கத்துடன் மேற்கொள்ளப்படும் உபவாசம் என்று நிச்சயப்படுத்துவது சில சமயம் கஷ்டமாக இருக்கும். ஆயினும் நான் சொல்லுவேன், ஒரு விரதம் சுயநலத்தைக் கருதி எடுத்துக் கொள்ளப்பட்டது அல்லது வேறு விதத்தில் தவறானது என்று நாம் கருதினால் அந்த உபவாசத்தை எதிர்த்து விட வேண்டும். அதற்குப் பயந்து அடங்கலாகாது. அந்த உபவாசக்காரன் கோரும் கோரிக்கைக்கு ஒப்பக் கூடாது. உபவாசக்காரன் இறந்து போனாலும் பொருட்படுத்தலாகாது. தவறான கருத்தைக் கொண்டு செய்யப்படும் உபவாசங்களை மக்கள் பொருட்படுத்தாமல் விட்டு விட்டால் அந்த விதமான சேஷ்டைகள் நின்று போகும்.

மானிட வழக்கங்களும் ஸ்தாபனங்களும் நன்மை தீமை இரண்டுக்கும் உதவும். தீமையைக் கண்டு பயந்து சத்தியாக்கிரக சாதனங்களில் ஒரு பெரும் சாதனமாகிய உபவாச விரதத்தை விட்டு விடுவதற்கில்லை. பலாத்காரம் செய்து ஒரு பயனை அடைவதற்குப் பதில் சத்தியாக்கிரகம் என்ற அஹிம்சை முறை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்தப் புது சாதனத்துக்கு இன்னும் பரிபூரண வடிவம் நாம் தரவில்லை. பலவிதத்தில் சோதனையும் முயற்சியும் செய்த பிறகுதான் அது பூரண வடிவம் பெறும். என்னுடைய தனி சத்தியாக்கிரக முறையை இந்தச் சந்தேகத்தின் காரணமாக நான் விட்டுவிட முடியாது. மனத் தூய்மையுடன் யோக்கியமான முறையில் அதை நான் அனுசரித்துக் கொண்டுதான் போக வேண்டும். பிழைகளைக் கண்டு பயந்து போய் விட்டுவிடுவதற்கில்லை.

(ஹரிஜன் 9-9-33)

# அன்னப் பறவை



மங்களம் காசிராஜன்

இல்டா கை வேலையில் பரபரப்பாக ஈடுபட்டிருந்தாள். எப்பொழுது பார்த்தாலும் ஏதாவதொரு கை வேலை அவள் கைகளைத் தஞ்சமடைந்து கொண்டேயிருக்கும். அன்றும் அவ்வண்ணமாக வீட்டை அலங்கரிப்பதில் வெகு முனைப்பாக ஈடுபட்டிருந்தாள்.

அவள் கைத்திறன் பட்ட ஒவ்வொன்றும் பிரம்மா படைத்த படைப்புக்கே சவால் விடுவது போல் அவ்வளவு தத்ரூபமாகக் காட்சி அளித்தது. அவள் வீட்டு ஜெப அறையில், கர்த்தாதி கர்த்தர் தேவ பிதாவாகிய சேசுபாலன் சின்னதும் பெரிசுமாக உள்ள ஆட்டு மந்தையினூடே கோலூன்றி நின்று விதமாகச் சுவரில் அவள் வரைந்திருந்த படம் அப்படியே பார்த்த மாத்திரத்தில் கண்ணை நிலைகுத்தச் செய்யும் பாணியில் அமைந்திருந்தது.

தேவாதி தேவன் திவ்யப் பிதா சித்திரம் கொள்ளை எழில் என்றால், அட்டையில் ஆட்டுக்குட்டி வடிவத்தைக் கத்திரித்துப் பஞ்சு கொண்டு வேலைப்பாடு செய்து அவள் தன் அறை மேஜையை அலங்கரிக்கும் காட்சிப் பொருளாக்கி வைத்திருந்த ஆட்டுக்குட்டியை, அப்படியே தூக்கிக் கொள்ள வேண்டும் போல் தோன்றும். இவ்வாறு ஒவ்வோர் அலங்காரமும் வெவ்வேறு பாணியில் நிரம்படச் சமைத்து வைத்திருந்தாள் இல்டா.

இல்டாவும் சாதாரண அழகியல்ல ; அசாதாரணமான அழகி. அவள் வெள்ளை மேனிக்கு அவளது வலது கன்ன ரத்தின மச்சம் ஒரு சோபையைக் கொடுத்தது.

வரப் போகும் பண்டிகைக்காக இல்லத்தை அவள் தீவிரமாக அலங்கரிப்பதில் முனைந்திருக்கையில், ''இல்டா ! இல்டா !'' என்று அழைத்தவாறு அடுத்த தெருவில் குடியிருக்கும் அவள் அக்காளின் மாமியார் நேசம்மாள் அவளைத் தேடி வந்தாள்.

வந்த விருந்தினரைப் பால் ஒளி வீசும் தன் வெண்ணிறப் பற்கள் பளிச்செனத் தெரிய முகமன் கூறி வரவேற்று விட்டு, வீட்டு வராந்தாவில் பூமாலைத் தோரணம் தொங்க விட ரோஸ் நிற கிரேப் பேப்பரை ரோஜா இதழ் வடிவத்துக்குக் கத்திரிக்கலானாள் இல்டா.

கை வேலையில் கணக்காக மூழ்கியிருந்த இல்டாவைப் பார்த்து, ''நாங்களும் சொல்லித்தான் பார்க்கிறோம். நீ பாட்டுக்கு ஒரு பதிலும் சொல்லாமலிருக்கிறியே ! இந்தக் கிறிஸ்துமஸுக்குக்கூடத் திருச்சியிலிருந்து ஜோஸப் வரப் போகிறான். உன் சம்மதம் தெரிஞ்சா புது வருஷம் பிறந்தாப்பிலே ஜாம் ஜாம்னு நடத்திப்பிடலாம்னு உங்க மாமா சொல்றாங்க. நீ என்ன சொல்றேன்னு தெரிஞ்சுக்கிட்டுப் போகத்தான் வந்தேன்'' என்றாள் நேசம்மாள்.

மூச்சு விடாமல் பேசிய அத்தை நேசம்மாளின் சொற்களைக் இல்டாவின் காதுகள் இன்று மட்டும் புதிதாகக் கேட்கின்றனவா? அல்ல. கேட்டுக் கேட்டுப் புளித்துப் போன அவள் கல்யாண விஷயம் என்ற காடிச் சரக்குதான். எனினும் தன் காது கேட்கும் ஒலிக்குப் பதில் மொழியைத் தன் வாயே சொல்லியாக வேண்டிய கடமையைக் கர்த்தர் அவளுக்கே அளித்திருந்தார்.

ஆம் ! இல்டாவின் தாயாரும், தந்தையும் இம்மண்ணுலகில் இல்லை. அவளுடன் பிறந்த தமக்கைமார் மூவரைத் தவிர, வேறு ஆண் சந்ததியும் இல்லை. தமக்கைமார் மூவரில் ஒருத்தியினுடைய மாமியார்தான், அவள் மகன் ஜோஸப்புக்கு இல்டாவை மனைவியாக்க ஆசைகொண்டு நடையாக நடக்கிறாள்.

ஆனால் இல்டாவா அதற்கெல்லாம் மசிந்து கொடுப்பவள் ? அவள் உள்ளம் சேவை என்ற சீரிய ஆத்மாநுபவத்தில் லயித்துவிட்டதே. இருப்பினும் அவளை இல்லற சாகரத்தில் இழுத்தடிக்கப் பார்த்தார்கள், அவளது உறவினர்கள் யாவரும். இழுத்தடித்த யாவருக்கும் ''வருகிற கிறிஸ்துமஸுக்கு முன்னால் பதில் சொல்லி விடுகிறேன்'' என்று கொடி காட்டி வந்தாள்.

வழக்கம் போல் சிரத்தையற்ற இல்டாவின் பதிலைக் கேட்ட நேசம்மாள், ''பண்டிகை வேலை தலைக்கு மேலே கெடக்கு. இப்ப ஒரு புதுக் கார்கூட வரப் போகுது. அதற்காக 'கார் ஷெட்' கட்டிக்கிட்டு இருக்காங்க. நான் போய்விட்டு அப்புறமா வரேன்'' என்று தன் மகன் ஜோஸப் புதிதாக வாங்கியிருக்கும் வாகனத்தைச் சொல்லாமல் சொல்லிப் புரிய வைத்து விட்டுப் போனாள்.

காராக இருக்கட்டும் ; இல்லையெனில் டாக்டர் ரங்காச்சாரி போல் ஜோஸப் பிளேன்தான் வாங்கட்டும். அவையெல்லாம் இல்டாவுக்குக் கால் தூசிதான். பின்னே என்ன? உள்ளூர் தமக்கை வீட்டார் தொந்தரவு இந்த வகை என்றால் வெளி ஊரிலுள்ள மற்றும் இரு தமக்கைமாரின் நிர்ப்பந்தமோ இதைவிடக் கொடிது.

உள்ளூர் தமக்கையாவது தன் உடன்பிறப்பு, ஒவ்வோரைப் போல் வகை வகை

யாத உடுக்கவும் உண்ணவும் பிறந்தவளல்ல என்று அறிந்து வைத்திருந்தாள்.

மூன்று தமக்கையார் கணவர்கள் கூடப் பிறந்த தம்பிகள் யாவரும் டாக்டர், வக்கீல், இன்ஜினியர் என்ற கல்யாண சூப்பர் மார்க்கெட் பேர்வழிகளாகத்தான் இருந்தார்கள். மலையானால் என்ன? மடுவானால் என்ன? ஹில்டாவைப் போன்ற பிறவிச் சேவகிக்கு இவையெல்லாம் ஒரு பொருட்டா?

சேவை மனப்பான்மையில் ஊறிய ஹில்டாவுக்குத் தன் ஆதரவில் படிக்கும் மாணவர் யாராவது உன்னதமான மார்க் வாங்கியிருந்தால் அது மலையாகத் தெரியும். இல்லையெனில் மாலைதோறும் அவள் தன் வீட்டில் அவனுக்குக் கற்பிக்கும் இயேசுபிரான் பாடலை மழலைச் சொல் மாறாக் கிள்ளை மொழிக் குழந்தை தத்துப்பித்தென்று உளறுவது போல் உளறி வைத்தால்கூட அது விந்தையாகத் தெரியும். அத்தகைய தருணங்களில் தானும் ஒரு சிறுமியாகி, கைத் தாளம் போட்டுக் குதிக்க ஆரம்பித்து விடுவாள். அவள் பார்க்கும் பார்வையிலே ஒரு பரவசம் இருக்கும். அவள் நோக்கெல்லாம் ஏழை எளியோர் விழி நோக்குத்தான். உற்றம் சுற்றம் என்பதெல்லாம் ஹில்டாவைப் பொறுத்த வரைக்கும் இரண்டாம் பட்சமே.

பலதுமாக எண்ணிக் குமைய வகை தெரியாத ஹில்டா, கத்திரிக்கோலால் கவர்த் தாளைக் கத்திரித்தபடி, ''எக்காளம்! எக்காளம்! ஏசு பிறந்தார் எக்காளமே!'' என்று துள்ளலும் துடிப்புமாகப் பாடிக் கொண்டே வேலையில் ஈடுபட்டிருந்தாள்.

பாளையங்கோட்டையிலிருந்து அவள் தமக்கைமார் இருவரும் தத்தம் கணவர்களுடன் காரில் வந்து இறங்கினர். வெளி வராந்தாவுக்கு வந்துகூட அவர்களை வரவேற்கத் தோன்றாத நிலையில், ''எல்லாருக்கும் தோத்திரம்'' என்றாள் ஹில்டா.

வந்ததும் வராததுமாக அவள் தமக்கையரில் மூத்தவள், ''என்னம்மா பெரிய அம்மா! வீட்டுக்கு வந்தவங்களை வெளியே வந்து வரவேற்கத் தெரியாமத்தான் பெரிய எம்.எஸ்ஸி படிப்பு படிச்சியாக்கும். உங்க அத்தான் கோபப்படப் போறாங்க. வராந்தாவிலே போய்த் தோத்திரம் பண்ணிவிட்டு வா'' என்றாள்.

''அக்கா! ரொம்பத்தான் நீயும் விரட்டாதே! நான் இப்ப கையிலே வைத்திருக்கிற வேலையைப் போட்டு விட்டுப் போக முடியாது. நீங்க ரெண்டு பேரும் வந்த விஷயம் பழைய விஷயம்தானே? பழைய குப்பையைக் கிளற வந்தீங்கன்னு; இப்ப ஒன்றும் பதில் சொல்ல மாட்டேன். எல்லாம் கிறிஸ்துமஸ் கழித்துத் தெரியப்படுத்துகிறேன்'' என்றாள் ஹில்டா.

''அம்மாளு! ஹில்டா! நாங்க இப்ப சொல்றது உனக்குப் பிடிக்காமத்தான் இருக்கும். வயசானப்புறம் கல்யாணம் செஞ்சிக்கிட்டோமில்லியேன்னு வருந்துவே! அப்பத் தெரியும் உனக்கு. அங்கே ஒரு மச்சரம்மாகூட நாற்பது வயது வரைக்கும் உன்னைமாதிரி—வக்கீலா? கர்த்தர் நோக்குக்கு எதிரா போய் வழக்காடுகிறவன்; இன்ஜினீயரா? தேவன் படைப்பை விடப் பெரிய படைப்பைப் படைக்கத் தெரிந்தவரா?' அப்படியன்று விதண்டா வாதம் பேசிக்கிட்டிருந்தாளாம். கடைசியிலே ஒரு வக்கீலையே கட்டிக்கிட்டவ. அதைப் போல் பின்னும் யோசியாதே! இப்போ நல்லா யோசிச்சு பண்ணி நாங்க சொல்றபடி நடந்துக்க. நாங்க அவ்வளவுதான் சொல்லுவோம். மெத்தப் படிச்சவளுக்கு இதைவிட எப்படிச் சொல்றது?'' என்று தன் குட்டிப் பிரசங்கத்தை முடித்தனர் ஹில்டாவின் சகோதரிகள்.

''பெரியக்காளும், சின்னக்காளும் வந்த வழியைப் பார்த்துப் போகப் போறீங்களா? அல்லது நான் வெளியே எழுந்து தோட்டத்தைப் பார்த்துப் போகட்டுமா?''

கீசு மூசு என்ற குரலில் அவள் பெரிய தமக்கை அழுதவாறு, ''ஏன் ஹில்டா எங்களையெல்லாம் இப்படிச் சித்திரவதை பண்ணுகிறாய்? வேளா வேளைக்குச் சாப்பிடாமலும், ஒரு நல்ல துணி கட்டிக்காமலும், ஒரு பொட்டு நகை நட்டு போட்டுக்காமலும், இப்படி ஏன் பைத்தியம் பிடிச்சு அலைகிறாய்? சொத்து சுகம் இல்லாட்டா விதியோன்னு இருக்கலாம். கலை போல் ஒரு லட்சம் ரூபாய் பாங்கிலே உன் பேருக்கு இருக்கும் போது ஏன் இந்தப் பட்டினி விரதமிருக்கிறது? எங்களுக்குப் புரியலே!'' என்று தொந்தியும் தொப்பையுமாக உள்ள தன் இடுப்பிலிருந்து கீழிறங்கிய புடவைச் சுருக்கை உயர்த்தி விட்டுக் கொண்டாள்.

''சும்மா அழுது ஆகாத்தியம் பண்ணுறீங்க! தயவுசெய்து உங்களையெல்லாம் கும்பிடுகிறேன். நான் கல்யாணமே பண்ணிக்கப் போறதில்லே. பேசாம வந்த வழியைப் பார்த்துப் போங்க ரெண்டு பேரும். உங்க தங்கச்சி ரோஸி வீட்டுக்குப் போங்க. என்னைக் கொஞ்ச நேரம் சும்மா விட்டா அதுவே பெரிய புண்ணியம்'' என்று சலிப்புடன் கூறினாள் ஹில்டா.

''உன் முடிவு என்னன்னு தெரிஞ்சுக்கிட்டுப் போய் என் கொழுந்தனுக்குக் கல்யாணத்தை முடிக்கணும்னு வந்திருக்கேன். ரெண்டிலே ஒண்ணைச் சொல்லு'' என்றாள் ஹில்டாவின் இளைய தமக்கை.

''நீங்க ரெண்டு பேரும், உங்கள் கொழுந்தன்மாருக்கு ஜோராய்யா போய், பெண் பார்த்துக் கல்யாணம் வையுங்கள். அந்த வகையை உள்ளூர் அக்கா வீட்டுக்கும் சொல்லிக் கொடுங்க. உங்களுக்கு ரொம்ப உபகாரமா இருக்கும்.''

தமக்கையருக்கும் தங்கைக்கும் நடந்த உரையாடலைக் கேள்வியுற்றதும் வந்திருந்த ஆண்கள், தத்தம் கார்களது 'ஸ்டீயரிங்கை'ப் போய்க் கைப்பற்றினர்.

* * *

கிறிஸ்துமஸுக்கு இன்னும் இரண்டே நாட்கள்தாம் இருந்தன. ஹில்டா குடையும் கையுமாகப் பாளையங்கோட்டை ஸ்டேஷனில் இறங்கி, தான் கல்வி கற்ற கான்வென்டுக்குள் நுழைந்து, அங்கு உள்ள மதர் சுப்பீரியரிடம் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தாள்.

அந்த அம்மாள் அவளை மேலும் கீழும் குறுக்கும் நெடுக்குமாகப் பல கேள்விகள் கேட்டுப் பரீட்சித்தார். காதலில் தோற்றவர்களும்

## வேலை நேரங்களிலும், விளையாட்டு வேளைகளிலும் அணிய வசதியான சிறந்த உள்ளாடைகள்

# டான்டெக்ஸ்



**பனியன்கள்,**
**வெஸ்ட்கள்,**
**அண்டர்பேன்ட்கள்**





அலுவல் நேரத்தில், பிரயாணத்தின்போது, விளையாடும் பொழுது, வீட்டிலிருக்கையில் டான்டெக்ஸ் உள்ளாடைகள் அணியுங்கள்.

பனியன்கள், வெஸ்ட்கள், அண்டர்பேன்ட்கள் பல சைஸ்களில் பிரீச் செய்யப் பட்டும், பிரீச் செய்யப் படாமலும் கிடைக்கின்றன.

உயர்ரக எகிப்தியப் பஞ்சாலானவை, அதிக வெண்மையானவை, கச்சிதமாகப் பொருந்துபவை, தொய்ந்து கொடுக்கும் தன்மையுடையவை, நன்றாகப் பிடிப்பவை.

ஒரு முறை டான்டெக்ஸ் அணிந்தால் எப்பொழுதும் டான்டெக்ஸ் அணிய விரும்புவீர்கள்.



இன்றே டான்டெக்ஸ் உள்ளாடைகள் வாங்குங்கள்.

எல்லாப் பிரதான ஜவுளிக்கடைகளிலும் கிடைக்கும்.

பூரண விற்பனையாளர்கள்:
**T. T. கிருஷ்ணமாச்சாரி & கம்பெனி**, மதராஸ்-6

வாழ்க்கையில் தோல்வி கண்டவர்களும் அவசரக் கோலத்தில் துறவு கொண்டு, பின் அவலமுறக் கூடாதே என்ற நல்லெண்ணத்தில், கேள்வி எனும் நெருப்பைக் கொண்டு அவளைப் புடமிட்டார்.

மதர் சுப்பீரியரின் இந்தப் புடமிடுதலுக்கெல்லாம் தேவையின்றி அவள் தான் பிறவியிலேயே பசும் பொன்னாச்சே! சேவை என்ற சீரிய காற்றையே சுவாசித்துக் கொண்டிருந்த அவளுக்கு மதர் கேட்ட கேள்விகள் யாவும் தென்றலாக, சுகந்த மணம் வீசின.

''ஒன்னே ஒன்னு!'' என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்த மதர் சுப்பீரியர், ''ஆமாம், இல்டா! இப்பொழுது நீ சொல்பவை யாவற்றையும் முழு மனத்துடன் ஆதரிக்கிறேன். ஆனால், படிக்கும் நாட்களில் பட்டும் பணியுமாக ஜொலி ஜொலியென்று ஜொலிப்பாயே! அந்தப் பழைய வாசனை திரும்ப உன்னிடம் வராதென்பது எவ்வளவு நிச்சயம்?'' என்று தணிந்த குரலில் சாந்தமாகக் கேட்டார்.

'' அதெல்லாம் சிறுமியாயிருக்கும்போது பெரியவர்கள் ஆட்டி வைத்த ஆட்டம்! அவை என்றோ என்னிடமிருந்து விடைபெற்று விட்டன. ஆடை அலங்காரம் இப்பொழுது என்னைப் பொறுத்த வரையில் மறந்து போய் விட்டன. 'அவை யெல்லாம் ஆத்மாவைக் கறையும் களங்கமும்தான் படுத்தும், தூய்மைப் படுத்தாது' என்பதை உய்த்துணர்ந்து உங்களிடம் வந்துள்ளேன். பள்ளியில் படிக்கும் பொழுது, என்னிடம் இருந்த உள்ளத் தூய்மை இன்றளவும் நின்று நிலைத்திருக்கிறது. எனக்கு ஆசீர்வாதம் தரவேண்டும்'' என்று பணிவுடன் வேண்டிக் கொண்டாள் இல்டா.

''எதற்கும் மன மாற்றத்துக்குப் பத்து நாட்கள் அவகாசம் தருகிறேன்.''

''மனமாற்றம் என்ற பிரச்னை எழும்புவதற்கே இடமில்லை மதர். என் சொத்துக்களையும் திருச் சபைக்கே எழுதி ரிஜிஸ்டர் பண்ணித் தஸ்தாவேஜுகளைக் கையில் எடுத்து வந்துள்ளேன்.''

மதர் சுப்பீரியர், பொது நோக்கோடு, கன்னி வாழ்வோடு திருச் சபையில் தொண்டாற்றுவதற்கு எவ்வளவோ மன வலிமை வேண்டும் என்பதைப் புன்னிப் பன்னி எடுத்துரைத்தார். ஆத்மாநுபவத்தில் லயித்து இறைவன் திருவடியில் சிரசை அர்ப்பணித்து விட்ட இல்டாவிடமா அதை யெல்லாம் சொல்ல வேண்டும்?

* * *

**பு**து வருஷப் பிறப்பன்று விடியற்காலை ஜெபத்தில் வலது கன்னத்தில் திருஷ்டிப் பொட்டளவு ரத்ன மச்சத்தோடு பால் மணம் கமழும் பச்சிளங் குழந்தையை ஒத்த வெள்ளை வெளேர் என்ற நிர்மலமான முகத்துடன் ஒரு சிஸ்டர் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டாள்.

இல்டாவின் தோற்றத்துக்கும் அந்த உடைக்கும்தான் எவ்வளவு பொருத்தம்! இதற்காகவே உலகில் ஜனித்தவள் போல் சாந்த மயமாக, அன்னப் பறவையெனத் தெளிந்த நிலையில் அப்போது காட்சி யளித்தாள், இல்டா!

## கடன்ஸ்ரீ



''துருக்கியிலுள்ள 'கெடிஸ்' என்ற நகரத்தில் சில நாட்களுக்கு முன் பூகம்பம் வந்ததே. அதில் ஆயிரக்கணக்கானவர்கள் இறந்து விட்டார்களாமே!''

''ஆமாம், ரொம்பப் பரிதாபம்தான்சார்.''

''இன்னும் வியட்நாமில் யுத்தம் ஓயவில்லை....''

''ஆமாம்.''

''இஸ்ரேல்-அரபு யுத்தமோ, போகப் போக இன்னும் அதிகமாகிறது.''

''ஆமாம், ஆமாம்.''

''கம்போடியாவில் கூட ஏதோ தகராறாமே?''

''ஆமாம், சார்.''

''ரஷ்யாவோ அணுகுண்டு சோதனைகளையெல்லாம் நடத்துகின்றது. செயற்கைக் கோள்களை அனுப்பவும் தொடங்கி விட்டதாம்.''

''உண்மைதான், சார்!''

''நம் நாட்டில் என்னடாவென்றால், ஒரு பக்கம் நக்ஸல்பாரிகள், இன்னொரு பக்கம் தீவிரவாதிகள், பயங்கரவாதிகள் என்று அல்லோலகல்லோலப்படுகின்றது.''

''ஆமாம். நீங்கள் சொல்வதெல்லாம் உண்மைதான் சார்.''

'' ஒவ்வொரு நாளும் வெளியே போனால் வீட்டுக்குப் பத்திரமாகத் திரும்பி வருவோமா என்று சந்தேகமாக இருக்கிறது...''

'' ஆமாம், சார், ஆமாம், அது சரி. இதெல்லாம் என்னிடம் இப்போது எதற்காகச் சொல்கிறீர்கள்?''

''ஹி... ஹி... வேறே ஒன்றுமில்லை சார். நாம் போற போது எடுத்துக் கொண்டா போகப் போகின்றோம்? ஹி... ஹி... ஒரு பத்து ரூபாய் கைமாத்தாகக் கொடுத்தால் அடுத்த வாரம்... ஹி... திருப்பி ஹி...ஹி.''

-- இரா. வெங்கடராமன்

ஆம்; அவள் ஓர் அன்னப் பறவைதான்! தூய பாலில் அதன் தூய்மையைக் குறைக்கும் நீரைக் கலந்து, அந்தக் கலப்படத்தைப் பாலென நம்பச் செய்ய முயன்றனர் இல்டாவின் தமக்கையர். ஆனால் அவள், அந்தக் கலப்படத்தில் உள்ள நீரை உய்த்துணர்ந்து, அதை நீக்கிப் பாலையே தனதாக்கிக் கொண்டாள்!

# இதோ

# மிக **வலிமையான** டயர்

## இது 260 மெட்ரிக் டன்கள் அழுத்தத் திற்கு சற்றும் சளைக்கவில்லை !

நாங்கள் இதை ஒவ்வொன்றும் 130 மெட்ரிக் டன்கள் எடையுள்ள இரண்டு ரயில் என்ஜின்களுக்கிடையே நசுங்க வைத்தோம் — பிறகு ஓட்டிப் பார்த்தோம் !

இந்தப் பரிசோதனை, மூன்று விதங்களில் வலிமையூட்டும் பயர்ஸ்டோனின் தனிப் பட்ட தயாரிப்பு முறையின் சிறப்பை நிரூபித்தது.
நாங்கள் ஒரு பிரத்யேக முறையில் டிரெட்டை டயருடன் பாண்ட் செய்கிறோம், டயரின் பக்கவாடுகளை பலப்படுத்துகிறோம், ஒவ்வொரு கோர்டையும் இன்ஸுலேட் செய்கிறோம்



உங்கள் பணத்துக்கு அதிக கிலோமீட்டர்கள் தரும் டயர். உங்கள் பணத்துக்கு அதிக நம்பகமான டயர். இன்றே உங்களுடைய பழைய டயர்களை மாற்றுங்கள்

மிக வலிமையான டயர் வாங்குங்கள்

# பயர்ஸ்டோன்

நாடெங்கிலும் விற்கப்படுகிறது — இன்றே உங்களுக்கருகில் உள்ள பயர்ஸ்டோன் டீலரைப் பாருங்கள்

40 வருடங்களாக இந்தியாவுக்கு சேவை

## நடந்ததுதான்! நம்புங்கள்

புகழ்பெற்ற உபன்யாசகர் ஒருவர் அந்த ஊரில் தொடர்ந்தாற் போல் அறுபது நாட்கள் கதாப்பிரசங்கம் நிகழ்த்தி முடித்தார். நல்ல பாராட்டு. வரவேற்பு. அவர் ஊருக்குப் புறப்படவிருந்த தினத்தன்று அவரை ஒரு பெண்மணி சந்தித்து வணங்கிவிட்டு ''கதை அதற்குள் முடிந்து விட்டதே? இன்னும் சில நாட்கள் தாங்கள் தங்கியிருந்து உபன்யாசம் செய்யக்கூடாதா என்று தோன்றுகிறது'' என்றாள் நீர் மல்கும் கண்களுடன்.

உபன்யாசகருக்கு உள்ளம் நெகிழ்ந்தது. ''அம்மா! நீ தினசரி கதை கேட்க வந்திருந்தாயா? சந்தோஷம்!'' என்றார்.

''இல்லே. நான் ஒருநாள்கூட வரவில்லே. என் மாமியார்தான் ஒருநாள் விடாமல் வந்திருந்தார்'' என்றாள் அந்தப் பெண்மணி.



# தொரிக்கவும் சிரிக்கவும்

கோமதி ஸ்வாமிநாதன்

## பாராளுமன்றப் புதிர்



ஏழாண்டு காலமாக மகாத்மா காந்தியையும் நேருவையும் தற்போதையப் பிரதமரையும்கூடச் சீன ரேடியோ இழித்துப் பழித்துப் பிரசாரம் செய்து வருகிறது.

- ராஜ்ய சபையில் பூபேஷ் குப்தா.

ஃ ஃ ஃ

மாவ் போக்கையும் - சீன ஆளும் கோஷ்டியையும் இந்தியாவில் அதன் ஆக்ரமிப்பையும் நான் கண்டிக்கபோதிலும், மாவிடமிருந்து உத்வேகம் பெறுவதில் நான் தவறு காணவில்லே.

- ராஜ்ய சபையில் சந்திரசேகர்.

## ஆறுமுகமாய் அமர்ந்த பெருமானே

இரு நபர்கள் சந்திக்கும்போது அங்கே உண்மையில் ஆறு நபர்கள் தோன்றுகிறார்கள்.

தான்தான் எப்படிப்பட்ட மனிதன் என்று நினைக்கும் இருவர்;

மற்றவன் எப்படிப்பட்டவன் என்று முடிவு கட்டும் இருவர்;

இயற்கையாகச் சந்திக்கும் இருவர்.



## ஹரிச்சந்திர உண்மை

இந்தியத் திரைப்படத் தொழிலின் முன்னோடியான தாதாசாகிப் பால்கே அவர்களுக்கு ஹரிச்சந்திரா படம் எடுக்க ஆன செலவு ரூபாய் பதினைந்தாயிரம்தான். ஓட்டலில் மாதம் பத்து ரூபாய் சம்பளத்துக்குப் பணிபுரிந்து கொண்டிருந்த சலுங்கே என்ற வாலிபனுக்குப் பதினைந்து ரூபாய் சம்பளம் பேசி சந்திரமதியாக நடிக்க வைத்தார்.



(தமிழகத்து லாட்டரிச் சீட்டின்மூலம் பத்து லட்ச ரூபாய் முதல் பரிசு பெற்றிருக்கும் பஞ்சாப் மாநிலத்தைச் சேர்ந்த மோத்ராஜ் தாபா என்பவர், பரிசு கிடைத்திருக்கும் செய்தியைக் கேட்ட பிறகு தூக்கம் வராமல் தவிக்கின்றார்!)




1. ஏதோ அதிருஷ்டம் அடிக்குமென்று
இரண்டு ரூபாய் தொலைத்து வைத்தேன்
இப்படி வந்து முடியுமென்று
எண்ணிப் பார்த்துச் செய்யவில்லை.

2. பத்து லட்சம் எனக்கேயாம்!
பச்சைத் தமிழர் லாட்டரியில்
பணத்தை வாங்கும் முன்பேயே
பாழும் தூக்கம் தொலைந்ததுவே!

3. நிறையப் பணமே வந்திட்டால்
நிம்மதியும் ரொம்பக் குறைந்திடுமோ?
பணமிழந்தோர் நிலை உணர்ந்தால்
பழைய தூக்கம் விடைபெற்றிடுமோ?

திருவல்லிக்கேணி பகுதியிலுள்ள ஒரு ஓட்டலில் கீழ்க்கண்ட ஒரு அசாதாரண அறிவிப்புப் பலகை பார்வையில் படுகிறது:

**தட்டுக்களையும் டபரா செட்டுக்களையும் திருடும் நபர்களைப் பிடித்துத் தருபவர்களுக்குத் தகுந்த சன்மானம் அளிக்கப்படும்**

இந்த விளம்பரம் ஒரு மேல்நாட்டுத் துணுக்கையும் நினைவு படுத்துகிறது. ஒரு கனவான் தன் நண்பர்கள் சிலருக்கு ஒருநாள் விருந்து அளித்தார் தன் இல்லத்தில். உணவு வகைகள் பிரமாதமாக இருந்தன. வந்திருந்தவர்கள் சாப்பாட்டைப் புகழத் தொடங்கிவிட்டார்கள். கனவான் எழுந்திருந்து கரம் கூப்பினார்: "நான் அளித்த உணவு வகைகளின் ருசி அப்படி ஒன்றும் பிரமாதமானதில்லை. ஆனால் நீங்கள் சாப்பிட உபயோகித்தீர்களே, ஸ்பூன், கத்தி, முட்கரண்டி எல்லாம்! அவைதாம் ருசிக்குக் காரணம். நகரத்தில் பிரபலமான ஓட்டல்களிலிருந்து அவ்வப்போது என்னால் கடத்தப்பட்டு வந்தவை அவை!" என்றார்.

அந்தத் தனவந்தர் கண்ணில் அகப்பட்டதைக் களவாட வேண்டும் என்ற ஒருவகை மனவியாதியால் பீடிக்கப்பட்டவர்!

"அரியக்குடி ராமானுஜய்யங்கார் வாய்ப் பாட்டு. கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை வயலின். ராமநாதன் ராவ் மிருதங்கம். இந்த நிகழ்ச்சியை அந்த நாட்களில் எப்படிக் கவரொட்டிகள் மூலம் விளம்பரப்படுத்துவார்கள் தெரியுமா? பெரிதாக இரண்டடி மூன்றடி உயரத்திற்கு முதல் எழுத்தாகிய 'ரா' வைப் போட்டு விட்டு பக்கத்தில் ஒன்றின் கீழ் ஒன்றாக, 'மானுஜய்யங்கார்', 'ஜமாணிக்கம் பிள்ளை', 'மநாதன் ராவ்' என்று போட்டுவிடுவார்கள். நானே பல சந்தர்ப்பங்களில் இந்தச் சுவரொட்டிகளைப் பார்த்து 'ஜமாணிக்கம் பிள்ளை' என்று படித்துச் சிரித்திருக்கிறேன். கொஞ்ச காலத்தில் ஃபேஷன் மாறி விட்டது. வித்வான்கள் பெயர்களை எல்லாம் ஒளித்து வைத்துவிட்டு ஊர்களின் பெயர்களுக்கு பிராபல்யம் அளித்தார்கள். அரியக்குடி, கும்பகோணம், பாலக்காடு என்று சுவரொட்டிகள் தோன்றின. நல்லவேளை, இந்தக் காலத்தில் இந்த ஃபேஷன் அமுலில் இல்லை. இருந்தால் இதுவும், 'ராமேஸ்வரம்', 'கன்யாகுமரி', 'குருவாயூர்' என்று க்ஷேத்திராடன டூரிஸ்ட் பஸ்கள் சம்பந்தப்பட்ட சுவரொட்டிகள்போலும் என்று நினைத்து விடுவார்கள்.

கும்பகோணம் ராஜமாணிக்கம்
பிள்ளை கூறக் கேட்டது

## பட்டுமோ —சிட்டுமோ

"நான் மார்க்கெட்டுக்குப் போய் வரவா? இல்லை மாவு மிஷினுக்குப் போய்க் கோதுமை திரித்துக் கொண்டு வரவா? ஏதாவது ஒரு காரியம்தான் என்னால் செய்ய முடியும்!"

"என்னவோ பிரமாதப்படுத்தறேளே! உடனெடுத்த ஜகஜீவன்ராம், உணவு மந்திரியாகவும் இருந்துண்டு, காங்கிரஸ் பிரசிடெண்டாகவும் இல்லே?... போயி இரண்டு வேலைகளையும் முடிச்சுண்டு வாங்கோ!



# விழா நடக்கட்டும்!

'மேஞு'

(எழுத்தாளர் பஞ்சாமிர்தம் தன் வீட்டுக் கூடத்தில் ஏதோ தீவிரமாக யோசித்த வாறு குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருக்கிறார். அதே தெருவில் வசிக்கும் கைலாசநாதன் நான்கைந்து பேர் பின்தொடர உள்ளே வருகிறார்.)

பஞ்சாமிர்தம்: வாங்க! வாங்க! வணக்கம். என்ன விஷயம்? உட்காருங்க.

கைலாசநாதன்: பரவாயில்லீங்க! நீங்க தீவிரமாக முனைஞ்சு நிற்கிற விஷயத்தைப்பற்றித் தான் நாங்க....

பஞ்சா: ஓ! அதுவா! எல்லாம் நிச்சயமாயிடுத்து. நீங்களும் ஒத்துழைச்சு அதிலே கலந்து கொண்டு....

கைலாச: நாசமாய்ப் போச்சு! ஐயா எழுத்தாளர் சார்! நீங்க எக்கேடு கெட்டுப் போங்க! எங்களுக்கு ஆட்சேபயில்லே!... ஆனால், உங்க ஏற்பாட்டை ஒரு பத்து நாட்கள் கழிச்சு வச்சுக்கிடுங்க!

பஞ்சா: மன்னிக்கணும்! என்னாலே இனி பொறுக்க முடியாது.

கைலாச: மண்ணுங்கட்டி! நீங்கபாட்டுக்கு இதை செஞ்சிடு வீங்க! அப்புறம் அதோட எஃபெக்ட் அடங்க எத்தனை நாளாகுமோ?... நான், இதோ வந்திருப்பவங்க எல்லாரும் அவங்க அவங்க வீட்டிலே கல்யாணங்கள் நிச்சயம் பண்ணி யிருக்கிறோம்! அதெல்லாம் நடந்து முடியட்டும்! அப்புறம்!

பஞ்சா: இது என் கௌரவப் பிரச்னை! உங்களுக்கு ஒரு மாப்பிள்ளை இல்லேன்னால் வேறு மாப்பிள்ளை! எனக்குக் கௌரவம் போச்சுன்னு இன்னொருத்தன் கிட்டே இரவல் வாங்க முடியாது. நான் பின் வாங்க மாட்டேன்! நீங்க போயிட்டு வாங்க. வணக்கம்.

(அவர்கள் போனதும் வைகுண்ட பதியின் தலைமையில் நான்கைந்து இளைஞர்கள் வருகி றார்கள்.)

வைகுண்டபதி: குட்மார்னிங் சார்! என் பெயர் வைகுண்டபதி!.... இவர்களெல்லாம் என் கல்லூரி நண்பர்கள்! நாங்க எல்லோரும் இந்த வாரம் ஃபைனல் எக்ஸாமினேஷன் எழுதுகிறோமே....

பஞ்சா: வெரிகுட்! அதற்கு நான் என்ன செய்யணும்! ஏதாவது [illegible] [illegible]? கொஸ்ச்சன் பேப்பர் அவுட்டா என்று விசாரிக்க வேண்டுமா?

வைகுண்ட: இல்லே சார்! நீங்க ஒரு ஏற்பாடு பண்ணிக்கிட்டு இருக்கீங்களே, அதை எங்க பரீட்சை முடியற வரை ஒத்திப் போட்டுடுங்கன்னு தயவு.

பஞ்சா: மிஸ்டர் வைகவுண்ட்! அதற்கும் உங்களுக்கும் சம்பந்தமில்லே.

வைகுண்ட: நிறைய இருக்கு. இந்த வட்டாரத்தில் இருக்கிற டீக்கடைக்காரர்கள் எல்லாரும் இருட்டறதுக்கு முன்னாலேயே கடையை மூடிடுவாங்க. அப்புறம் நாங்க எங்கே டீ குடிக்கிறது? எப்படிப் படிக்கிறது?

பஞ்சா: ஸாரி மிஸ்டர் வைகவுண்ட்! என் ப்ரோகிராமை ஒத்திப் போடுவதற்கில்லே. நீங்க போகலாம்.

(மாணவர் குழு போகிறது. சில நிமிடங்கள் கழித்துப் பஞ்சாமிர்தத்தின் வீட்டு வேலைக்காரி நாராயம்மா வருகிறாள்.)

நாரா: அப்படி ஒத்திப் போ, சாமி! கூடத்தைக் கழுவி விட்டுப் போறேன்.

பஞ்சா: ஸாரி! இந்த விஷயத்தை என்னாலே ஒத்திப் போட முடியாது.

நாரா: என்ன சாமி சொல்லறே! முடியாதுன்னு நின்னுக் கிட்டே இரு. எனக்கு வேலை மிச்சம்.

பஞ்சாமிர்தம் (திடுக்கிட்டு): ஓ! நீயா!.... சரி, சரி! நான் உள்ளே போகிறேன்.

நாரா: ஏன் சாமி! தெரு வெல்லாம் உன்னைப் பத்திப் பேசிக்கிறாங்களே! என்ன விஷயம்....?

பஞ்சா: பெரிய விஷயம்! இந்த ரௌடி சிங்காரம் இருக்கானே! அவனுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டு விழா நடத்தப் போறேன்.

நாரா: உன் புத்திக்கு என்ன சாமி வந்திருச்சு! இருந்திருந்து அந்த ரௌடிப் பயலைத் தலையிலே வைச்சுக் கொண்டாடறே! உனக்கு அவன் என்ன செஞ்சான்!

பஞ்சா: அவன் செஞ்சதினாலே தானே இப்ப நான் செய்யறேன்! நாராயம்மா! நான் போன மாசம் நம்ப பேட்டை கோவாப்பரேடிவ் ஸ்டோர்ஸ் தேர்தலிலே போட்டி போட்டேன் தெரியுமில்லே!... இந்த் சிங்காரம் பயல் என்ன



பண்ணினான் தெரியுமா? கதை எழுதறவனுக்குக் கடை வியவகாரம் என்ன தெரியும்னு பிரசாரம் பண்ணி என் விரோதியை ஜெயிக்க வச்சான்!

தாயா: அதுக்கு அந்த விரோதியில்லே அவனைப் பாராட்டி மாலே போடணும்? நீ ஏன் போடறே ?

பஞ்சா: அங்கேதான் விஷயமே இருக்கு தாயாரம்மா! இந்தச் சிங்காரம் பயல் மாதிரி நம்ப பேட்டையிலே இன்னொரு பயல் நாகலிங்கம் இருக்கான் தெரியுமில்லே! இந்த நாகலிங்கம் பெரிய ரௌடி. நான் பொன்னாடை போத்தின உடனே இந்தச் சிங்காரம் கொஞ்சம் தலே கனத்தோட மீசையை முறுக்குவான்! இதை அந்த நாகலிங்கம் சகிப்பானு ? அவனும் அவன் ஆட்களும் சிங்காரம் மண்டையில் இரண்டு தட்டு தட்டுவாங்க. என்னாலே செய்ய முடியாததை நாகலிங்கம் செய்வான். அதுதான் ஏற்பாடு.

தாயா: கொக்கு தலேயிலே வெண்ணெயை வச்சுப் பிடிக்கப் போறியா?

பஞ்சா: அதுக்குப் பேருதான் டிப்ளோமஸி-ராஜ தந்திரம். உனக்குப் புரியாது. வேலேயைப் பாரு ! கலாட்டா வரும்னு எல்லாரும் சொன்னாங்க ! எனக்கென்ன? என் ஆத்திரம் தீர வேணும் ?

தாயா: அப்படியா சேதி சாமி!.... அந்த நாகலிங்கம் பயல் சிங்காரத்தைத் தட்டறதுக்குப் பதிலாக உன்னேயே இரண்டு தட்டு தட்டின்னு?

பஞ்சா: என்கிட்டே வாலாட்டுவானு? அப்போ நான் சிங்காரத்தையே உதவிக்குக் கூப்பிடுவேனே? அப்படியெல்லாம் நடக்காது. நாகலிங்கம் சிங்காரத்தைத் தான் உதைப்பான்.

தாயா: அதையும் பார்த்துடறேன்! சிங்காரம் மேலே எவன் கை வைக்கிறான்னு. என் மவன் மேலே எவன் விரலாவது படுமா ?

பஞ்சா: ஐயையோ! நீ சிங்காரத்தின் அம்மாவா? உன்கிட்டே போய் விஷயத்தைச் சொன்னேனே!

தாயா: இன்னொண்ணும் கேட்டுக்கோ சாமி ! அந்த நாகலிங்கம் என் தம்பி ! மாமாக்காரன் மருமகன் கிட்டே வருவானு?

பஞ்சா: நாசமாய்ப்போச்சு! நாசமாய்ப் போச்சு ! ஒரு விஷயத்திலே நல்லதாவும் போச்சு! இந்தப் பாராட்டு விழா செலவெல்லாம் மிச்சம் ஆல் கான்ஸல்ட் !



தாயாரம்மா! உனக்கு ரொம்ப ரொம்பத் தாங்க்ஸ் அம்மா!

(உள்ளே போகத் திரும்புகிறார்.)

தாயா: இந்தா சாமி! கொஞ்சம் நில்லு! அந்தண்ட அப்படிக் கலபமாச் சொல்லிட்டுப் போயிட்டே! நீ ஊரெல்லாம் தண்டோராப் போட்டுட்டு இப்போ 'கம்'னு இருந்தியின்னு என் மவன் அந்தண்டு என்னு ஆறது?

பஞ்சா: என் பிளான்தான் 'கோவிந்தா' ஆச்சே ! பிரயோசனம் இல்லாமே. உன் மவன் புகழை ஏன் பாடறேன்?

தாயா: சாமி! அப்படீன்னு உஷாரா இருந்துக்க! காரணமில்லாமே நீ உன் புரோகிராமை நிறுத்திட்டேன்னு என் மவன் சும்மா இருக்க மாட்டான். என் தம்பி கிட்டேயும் ஒரு வார்த்தை சொல்லிடறேன் ! இரண்டு பேரும் சேர்ந்துகிட்டு உன்னைத் தெருவிலே நடக்க விடமாட்டானுக !

பஞ்சா: ஐயையோ ! பயமுறுத்தறியே! நான் என்ன செய்வேன்?

தாயா: தீர்மானம் பண்ணினபடி கொண்டாட்டத்தை நடத்து.

பஞ்சாமிர்தம் (சற்று யோசித்து): தாயாரம்மா! தாயாரம்மா! உனக்கு எத்தனே வயசாகுது? உன் மகன், தம்பி, இரண்டு பேருக்கும் சந்தோஷம் உண்டுபண்ணி...

தாயா: ஏஞ்சாமி! எனக்கு என்ன வந்தது? அறுபத்தி ஆறு முடிஞ்சு அறுபத்தேழு.

பஞ்சா: உனக்கு யோகம் வருது!.... தாயாரம்மா! குறிப்பிட்ட நாளிலே உனக்கு அறுபத்தி ஏழாவது பிறந்த நாள் கொண்டாடறேன்! நாட்டுக்குச் சேவை செய்யறேன்னு நினேச்சவங்களெல்லாம் பிறந்த நாள் விழாக் கொண்டாடற போது வீட்டுக்குச் சேவை செய்யற உனக்குக் கொண்டாடறதிலே நான் பெருமைப் படறேன்! நான் புதுமை எழுத்தாளன்!

தாயா: உனக்கும் புத்தி இருக்கு சாமி ! (சற்று யோசித்து)... சாமி! என்னைப் போட்டோ எடுத்து வால் நோட்டீசு ஒட்ட ஏற்பாடு செய் சாமி. அதைப் பார்க்கணும்னு எனக்கு ரொம்ப ஆசை.

(போகிறாள்)

பஞ்சாமிர்தம் (தலேயில் கை வைத்து) : ஆண்டவனே! இந்தத் தாயாரம்மா ஆசையிலேயிருந்து என்னைக் காப்பாத்துடாப்பா!..

(போகிறார்.

"அபர்ணா."

நான் திடுக்கிட்டேன். திரும்பினேன். என்னை நோக்கி முறுவலித்தாள் அந்தப் பெண். யார் இது?.... எங்கோ பார்த்த முகமாக இருக்கிறதே.... ஓ! அவள்.... அவளா?.... ஆம், அவள்தான் ... பெயர்...? வந்து வந்து.... பாரதி....

"அபர்ணா.... வந்து நீ வந்து.... உன் பெயர் மறந்து விட்டேன். அதனால்தான் அப்படிக் கூப்பிட்டேன். என்ன ஏதோ மாதிரி ஆகிவிட்டாய் - அபர்ணா என்று கூப்பிடக் கூடாதா என்ன?"

"உம்... வந்து என் பெயர் ... சரோஜா. உன் பெயர் பாரதிதானே?"



"ஆமாய். அடேடே, நீ எப்படி ஞாபகம் வைச்சுண்டிருக்கே அந்தை? எனக்கு உன் பெயர் ஞாபகம் வரலே. அதனாலேதான் அப்படிக்

# தபஸ்

நா. அனந்தகிருஷ்ணன்

கூப்பிட்டேன். "அபர்ணா"... ஏன் இந்தப் பெயருக்குத்தான் என்ன?"

"உம்... ஒன்றுமில்லே. ஆமாம், இந்தப் பெயருக்கு என்ன? ஆனால் நம்ம அப்பா அம்மா மெனக்கெட்டு யோசிச்சு யோசிச்சு நிச்சயம் பண்ணி வச்ச பேரை நாம மாத்திக் கறது சரியாகுமா? அதனாலேதான். உம்... அப்புறம்... வந்து... என்ன பாரதி.... நீ இப்போ எங்கே இருக்கே? என்ன பண்ணறே.. ஆமாம். இங்கே நின்னுண்டு பேசுவானேன்? வாயேன். வா. வீட்டுக்குப் போய்ச் சாவகாசமாய்ப் பேசலாம். என்ன? உம்... கிளம்பு."

பஸ் வந்தது. இரண்டு பேரும் ஏறிக் கொண்டோம். சேர்ந்து உட்கார இடம் காலியில்லே. தனித்தனியே உட்கார்ந்தோம். அவ்வளவாகப் பேச முடியவில்லை. என் சிந்தனை ஓடியது. பஸ்ஸைவிட வேகமாக - ஆனால் பின் நோக்கி.

அந்தச் சின்ன வயசிலே பள்ளியில் படித்த நாட்கள். எனக்கு ஒரு துடிப்பு. எப்பொழுதும் புருபுருவென்று. பள்ளிக்கூட நாடகங்களில் எனக்கு ஒரு முக்கியமான பங்கு உண்டு. அன்று முதலே அப்படி.. எதையும் நன்றாகச் செய்ய வேண்டும். 'நன்றாக' என்றால் வெறும் 'நன்றாக' இல்லே. அழுத்தம் திருத்தமாக.... அப்பழுக்கில்லாமல். சுத்தமாக....

"என்ன? என்ன யோசனை பண்ணிண்டிருக்கே?" பின்னாலிருந்து கேட்கிறாள் பாரதி.

"ஒன்றுமில்லே. சும்மா...."

அவள் அபர்ணா என்ற பெயரைச் சொன்னதும் என் நினைவு எங்கோ போய் விட்டது.

பள்ளியிறுதி வகுப்பு. ஆண்டு இறுதி. பள்ளிக்கூட ஆண்டு விழாக் கொண்டாட்ட நாடகம். பார்வதி தவம் செய்கிறாள். சிவபெருமான் அவளுக்கு நேரே வந்து அருள்புரிகிறார். காளிதாஸனுடைய குமார சம்பவத்திலிருந்து பொறுக்கி எடுத்த சுலோகங்களை மாணவிகள் இரண்டு பேர் பாட அதற்குத் தக்கபடி அபிநயம் பிடிக்க வேண்டியது. ஒத்திகை பல முறை நடந்தது. எனக்குப் பார்வதி வேஷம். சிவனாக, பாரதி. இதோ இந்த இவள்தான். அப்பொழுது உடம்பு நன்றாக இருந்தது. நல்ல ஆகிருதி. இப்பொழுது ஏனோ தளர்ந்து போயிருக்கிறாள். கல்யாணமாகிக் குழந்தை குழந்தை பெற்று உடம்பு உடைந்திருக்கும்....

நாட்டிய நாடக ஒத்திகையின் பொழுது நான் அவ்வளவு அக்கறையோடு நடிக்கவில்லை. தலைமை ஆசிரியையே கூட இருந்து ஒத்திகை நடத்தினாள். அவளுக்கு ரொம்பக் கவலே. இந்த நாடகத்தின் வெற்றியை ரொம்பவும் நம்பியிருந்தாள். ஆண்டு விழாவுக்கு நீதிபதி ஒருவர் தலைமை தாங்குவதாக இருந்தாராம்.



அவர் ஒரு சம்ஸ்கிருதப் பிரியர். பள்ளிக்கூடத்துக்குக் கட்டட வசதி கொஞ்சம் குறைவாக இருந்தது. அந்தக் குறையைப் போக்குவதற்காக அவரை அண்டிய பொழுது 'பார்க்கலாம்' என்று சொல்லியிருந்தாராம். அவரைக் கவரத்தான் இந்த நாடகம்.

அன்று மாலை. தலைமையாசிரியை என்னைத் தனியாகக் கூப்பிட்டாள். 'இதோ பார், சரோஜா. பார்வதியின் பாகத்திலே தான் நாடகத்தின் உயிர். உனக்குப் பேச்சு கிடையாது. உன்னுடைய முக பாவத்திலேதான் சகலமும் அடங்கியிருக்கிறது. ஏதோ சொல்லி விட்டேன். நீதான்....' அதற்கு மேல் பேச முடியவில்லை அவரால்.

நாட்டிய நாடகம் நடந்தது. கனம் நீதிபதி அவர்கள் முன்னிலையில்.

எல்லாவற்றுக்கும் பிறகு அவர் பேச ஆரம்பித்தார்: ''நாட்டிய நாடகம் என் மனத்தைத் தொட்டது. அபர்ணாவாக நடித்த குழந்தை ஆகா... என்ன அற்புதம். அந்தக் குழந்தைக்குப் பகவான் தீர்க்காயுளைக் கொடுக்கணும். எதுக்குச் சொல்ல வந்தேன்னா.... அந்தக் குழந்தையோட நடிப்பு தத்ரூபமா பார்வதி தேவியையே பார்க்கிறோமோ என்று தோணும்படியா யிருந்தது. காளிதாஸன் சொன்ன மாதிரி.... இந்தக் குழந்தை பெரியவளானதும் இப்பேர்ப்பட்ட தபஸ் பண்ணும்படியான நிலைமை இந்தக் குழந்தைக்கு வராதபடிக்குப் பகவான் பார்த்துக்கணும்னு பிரார்த்திக்கிறேன். இங்கே இருக்கிற பெரியவாள் இப்படிச் சொல்றதுக்காக என்னை மன்னிச்சுடணும். இதை எதனாலே சொன்னேன்னா இந்த நாடகம் - இந்தக் குழந்தையோட பாவ பூர்வமான நடிப்பு என்னை அப்படிக்கு ஆகர்ஷிச்சுடுத்து.''

அவர் பேசிக் கொண்டே போனார். என்னால் அவருடைய பேச்சை முழுவதுமாகப் புரிந்துகொள்ள முடியவில்லை.

வீட்டுக்கு வந்ததும் அம்மா திருஷ்டி கழித்தாள். ''போறுமே.... அபர்ணாவுமாச்சு. அடுப்புக் கட்டியுமாச்சு. அந்த மனுஷன் கண்ணுபின்னுன்னு எதையோ பேசி வச்சார். பேசறதைப் பார்த்தா ஜட்ஜாட்டமாவே தெரியலே. ஏதோ அம்மாஞ்சி மாதிரி...''

அபர்ணா - அம்மாவுக்கு ஏன்தான் அப்படிக் கோபம் வந்ததோ! அடுத்த நாள் பாரதி என்னை அந்தப் பெயர் சொல்லிக் கூப்பிட்டதும், அம்மா வெடுக்கென்று, ''போறுண்டியம்மா. அதையெல்லாம் பள்ளிக்கூடத்தோடே வச்சுக்கோ. லட்சணமா சரோஜான்னு கூப்பிட்டா என்ன? அபர்ணாவாம், அழுமூஞ்சியாம்.'' பாரதியின் முகம் சின்னதாகி விட்டது. அது ஒரு நிமிஷம் தான். அவள் வாயாடி. மறு நிமிஷம் சிரித்தபடி, ''மாமி, என்ன அப்படிச் சொல்லிட்டேள்? அபர்ணான்னு என்ன அர்த்தம் தெரியுமோ? சொல்றேன், கேளுங்கோ. பர்ணம் இன்னா இலே. பார்வதி தேவியானவள் ஒவ்வொன்றாகக் குறைத்துக் கொண்டே வந்து கடைசியிலே இலைகூடச் சாப்பிடாமல் பகவான் பரமேசுவரனை நினைத்து தபஸ் பண்ணினாள். அதனாலே இலைகூட இல்லாத தனாலே அவளுக்கு அபர்ணா என்று பெயர்.''

அம்மா உள்ளே போய்விட்டாள்.



**ப**ஸ் நின்றது. நானும் பாரதியும் இறங்கினோம். "சரோஜா! நீ என்ன யோசனை பண்ணிண்டிருந்தேன்னு சொல்லட்டுமா? அபர்ணா என்கிற பேரைப் பத்தித்தானே?"

"உம்...."

வீட்டுக்குள் நுழைந்ததும் அம்மாவிடம் சொன்னேன். அம்மாவுக்கு ஞாபகம் இல்லை. பாரதி, "என்ன மாமி ஞாபகம் இல்லே என்கிறேள். இவளை அபர்ணான்னு கூப்பிட்டால் சண்டைக்கு வருவேளே, அதுகூடவா ஞாபகம் இல்லே?" என்றாள். அம்மா முகம் ஒரு மாதிரி ஆகிவிட்டது. "ஓ..நீயா? அந்தப் பெண்ணா?" சிறிது நேர அமைதிக்குப் பிறகு அம்மா சொன்னாள்: "உம் பேசிண்டிருங்கோ. எனக்கு உள்ளே காரியம் இருக்கு தலைக்கு மேலே..."

இவ்வளவு போதாதா பாரதிக்கு? துளைத்தெடுத்து விட்டாள். "அபர்ணா என்ற பெயரிலே என்ன மாயம் இருக்கிறது? சொன்னதுமே உங்கம்மா முகம் எல்லாம் எப்படியோ போறதே! என்ன விஷயம்? என்ன...அந்த ஜட்ஜ் சொன்ன மாதிரி ஏதாவது ஆகிவிட்டதா என்ன?" கேள்விகள்...கேள்விகள்..

வேறு வழியில்லை. நான் சொல்லிவிட்டேன்.

அவரைச் சந்தித்தது. நேசித்தது. தீராக் காதல் கொண்டது. அப்பா சம்மதிக்காதது. அன்று குதியாய்க் குதித்தது எல்லாவற்றையும்.... அதற்குக் காரணங்களையும். அவர் ஒரு பட்டதாரி இல்லை. மாதம் நூறு ரூபாய் சம்பளம் வாங்குகிற ஒரு குமாஸ்தா. சொத்தும் சுகமும் இல்லாத ஓர் அநாதை. 'ஆளைப் பார்ப்பதற்கே விகாரமாய் வியாதியோ என்ன எழவோ...' இதெல்லாம் அப்பாவுடையவும் அண்ணாவுடையவும் வர்ணனைகள். என் சிநேகிதி ஒருத்தி சொன்னாள்: "சரோ! அவர்களுடைய கோணத்திலிருந்து பார்த்தால் அவர்கள் சொல்வது நியாயமே. பார். நான் உங்கப்பாவாக இருந்தால்கூடத்தான் இப்படி நடக்கும். என் மகளுக்கு இதோ உன்னுடைய 'அவரைப்'போல ஒரு கணவனைக் கட்டி வைக்க மாட்டேன். என் மாப்பிள்ளை என்று நான் இன்ட்ரொட்யூஸ் பண்ணி வைக்கும்போது அவர்கள் என்னைப் பார்த்து அசூயைப்படும்படியா இருக்கணும். ஆமாம்."

யார்யாரோ என்னென்னவோ சொன்னார்கள். அந்தஸ்து. குடும்ப கௌரவம்... விட்டுக் கொடுப்பது என்பது நல்ல சுபாவந்தான். பிடிவாதம் கெட்ட குணம்தான். ஆனால் எல்லா வியாதிக்கும் ஒரே மருந்தும் எல்லாக் குற்றத்துக்கும் ஒரே தண்டனையும் இல்லை. என்னால் அவரை மறப்பதோ முடியாது...... அந்தஸ்தையும் சம்பளத்தையும் பார்த்து அன்பு கொள்வதென்றால் நேசிக்கப்பட வேண்டியவை கிரீடங்களும் ரூபாய் நோட்டுக்களும்தான்...

"அப்புறம் அவர் என்ன ஆனார்?" பாரதி கேட்டாள்.

"நான் அவரோடு வாழத் துடித்தேன். பட்டினியானாலும் அவரோடு பகிர்ந்துகொள்ளத் தயாராக இருந்தேன். ஆனால் அவர்...பட்டினியை எனக்குப் பகிர்ந்து தரச் சம்மதிக்கவில்லை. ரூபாய் நோட்டுக்களும் அந்தஸ்தும் ஆட்சி செய்யாத உலகத்தில் சந்திக்கிறேன் என்று சொல்லிப் போய்விட்டார்."

"செ...செத்துப் போய்விட்டாரா?" என்று பாரதி கேட்டாள் திக்கித் திணறியபடி.

"இல்லே. அப்பா அன்றைக்குப் பொறுத்த மட்டில் அப்படித்தான்... ஆனால் நான் நம்புகிறேன். அவர் வருவார். ஒரு நாள் வருவார். வந்து அண்ணா அப்பா இவர்கள் முகத்திலே நோட்டுக் கட்டுக்களை விசிறியடித்து விட்டு என்னைப் பார்ப்பார். நான் கட்டின புடவையோடு வெளியிலே இறங்குவேன். அவர் 'சரோ கொஞ்சம் நில்லு' என்று சொல்லி, அப்பா அண்ணா இவர்கள் முன்னிலையிலேயே என் கழுத்தில்....அப்புறம் நானும் அவரும் போவோம். போய்த் தனியா ஒரு தோப்பிலே தாமரைக் குளத்துக்குப் பக்கத்திலே ஒரு சின்னக் குடிசை. சீதையும் ராமனும் இருப்பதற்காக லட்சுமணன் வேய்ந்தானே அந்த மாதிரிக் குடிசை— அதிலே இருப்போம். உனக்குத் தெரியுமோ பாரதி... அவருக்குக் குடிசையும் தாமரைக் குளமும் அவ்வளவு இஷ்டம். அடிக்கடி சொல்லுவார்..."

பாரதி குறுக்கிட்டாள்: "அவர் இருக்காரா, இல்லையா?":

"இருக்கார்."

"உயிரோட?"

"உயிரோட."

"எங்கே?"

"தெரியாது."

"அப்படின்னா?"

"அப்படின்னா எங்கே இருக்கார், என்ன செய்யறார்னு தெரியாது. நான் சொன்னதன் பேரிலே அவர் தைரியமா அப்பாகிட்டே வந்து பெண் கொடுங்கோன்னு கேட்டார். அப்பா முகத்தில் அடிச்சாப்போலப் பதில் சொல்லி அனுப்பிச்சுட்டார். அவர் ரொம்ப மானி. அதற்கப்புறம் ஒரு வாரம் படுத்த படுக்கையா கிடந்தார். இது அவருக்கு ஒரு பெரிய ஷாக் ஆயிடுத்து. போதாக் குறைக்கு எங்க சொந்தக்காரர் ஒருத்தர் இதை எங்கும் தண்டோராப் போட ஆரம்பிச்சுட்டார். அவமானம் தாங்க முடியாமல் அவர்..."

"உம்...சரோ, அழாதே... சமாசாரத்தைச் சொல்லு."

"அவர் உத்தியோகத்தை ராஜிநாமா செய்துட்டு ராவோடு ராவா எங்கேயோ போயிட்டார். அன்றிலிருந்து நானும் அவரை எதிர்பார்த்துண்டிருக்கேன்."

"அதாவது அபர்ணாவாகத் தபஸ் பண்ணிண்டிருக்கே?"

"உம்...ஆனால் ஒரு வித்தியாசம். அபர்ணாவின் தபஸ் பலித்தது. பரமேசுவரன் அவள் முன் வந்தான்."

"உன் தபஸும் பலிக்கும்."

அவள் அதோடு நிறுத்தவில்லை. "இங்கே அப்பா வேறு வரன் பார்க்கவில்லையா என்ன?"

"ஓ...அதைக் கேட்கிறாயா? நான் கண்டிப்பாகச் சொல்லிவிட்டேன். என்னை உயிரோடு பார்க்க வேண்டுமானால் அப்பா அந்த மாதிரி முயற்சிகளில் ஈடுபட வேண்டாம் என்று."

"ஓ...அதிருக்கட்டும். உன்னுடைய அவரிடம் அப்படி ஆசை கொள்ளும்படி என்னத்தைக் கண்டாய்?"

"அதை நான் எப்படிச் சொல்வது நீ எப்படிப் புரிந்து கொள்வது?"

அவள் புறப்படத் தயாரானாள்.

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31**

**Managing Editor: T. Sadasivam**


மோகன்ச்
சிரிப்பில்
மிதந்ததுண்டோ?
ஃபண்டா ஆரஞ்சு
சுவை இனிதே...
பருகிடவே
எடுக்காதோ தாகம்!
ஃபண்டா கோகா-கோலா
கம்பெனியின் தயாரிப்பு
CMCF-3-152-TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon